ஆ. அறம்வளர்த்த நாதன்.

உ

திருச்சிற்றம்பலம்

# சிவஞான பாடங்கள்

(இரண்டாம் பதிப்பு)




ஆசிரியர்

குலசேகரன்பட்டினம் சித்தாந்த வித்தகர்

**வீ. குமாரவேலுப் பிள்ளை**



வேல்மன்றம் வெளியீடு

தூத்துக்குடி.

உ

திருச்சிற்றம்பலம்

# சிவஞான பாடங்கள்

(இரண்டாம் பதிப்பு)

20.5.94.

ஆசிரியர்,
குலசேகரன்பட்டினம் சித்தாந்த வித்தகர்,
வீ. குமாரவேலுப் பிள்ளை

45, வடக்குத்தெரு
குலசேகரபட்டினம்
628206.


வெளியிடுவோர் :
கு. குமரன்
''வேல் மன்றம்''
30, மூன்றுவது தெரு
சிதம்பரம்நகர்
தூத்துக்குடி.

உ

சிவமயம்

# முன்னுரை

## (இரண்டாம் பதிப்பு)

இந்நூலின் முதற்பதிப்பைப் பலரும் பெற்றுப் பயின்று பயன் பெற்றனர் தற்போது அதன் படிகள் கிடைக்கவில்லை.

பலர் கேட்டுக் கொள்ளவே அதன் அருமையும் தேவையும் உணர்ந்த எனது அருமை மனைவி திருமதி. செல்லம் குமரனின் விருப்பத்தாலும் வற்புறுத்தலாலும் இவ்விரண்டாம் பதிப்பை வெளியிடலானேன்.

தொடங்கிவைத்து மகிழ்ந்தவள் நிறைவு காணு முன் இறைவன் திருவடி சேர்ந்து விட்டாள், கடமை முடிந்ததென்று அழைத்துக் கொண்டான் போலும், அன்னவளின் நினைவு அஞ்சலியாக இந்நூலை வெளியிடத் திருவருள் கூட்டியுள்ளது.

நூலை அச்சிட்டு ஒப்புநோக்கி வடிவமைத்து உதவிய எனது தந்தையாரின் மாணவர் திரு. அறம்வளர்த்த நாதன் அவர்களுக்கு என் நன்றி உரித்தாகுக.

அன்பன்,

தூத்துக்குடி — கு. குமரன்

வேல் மன்றம்

15—3—94 — 30. மூன்றாவது தெரு, சிதம்பரம்நகர்.

தூத்துக்குடி



ஆசிரியர்

குலசேகரன்பட்டினம் சித்தாந்த வித்தகர்

## வீ. குமாரவேலுப் பிள்ளை

''செந்தமிழ்த் தேனில் சிவஞானத் தெள்ளமுதை
எந்தநிலை யுள்ளாரும் எற்றருந்த — தந்த குரு
சித்தாந்த வித்தகர் சீர்க்குமர வேலரருள்
முத்திக்கு வித்தாமிந் நூல்''



திருமதி. செல்லம் குமரன்

| | |
|---|---|
| தோற்றம் | மறைவு |
| 1931 | 1993 |

கண்ணை இமை காப்பது போல் என்குடும்பத்தை வண்ணமுறக் காத்திட்ட எனது அருமை மனைவி திருமதி செல்லம்குமரன் நினைவு அஞ்சலியாக இந்தப் பதிப்பு வெளியிடப்படுகிறது.

கு. குமரன்

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புரை.

மதுரை, சித்தாந்த கலாநிதி, உரைவேந்தர்,

**ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள்**

குலசேகரன்பட்டினம், சித்தாந்த வித்தகர், **திரு. வீ. குமாரவேலுப் பிள்ளை அவர்கள்,** எழுதிய சிவஞான பாடங்கள் என்ற நூலைப்படிக்கும் பேறு எனக்குக் கிடைத்தது. பல்லாண்டுகள் பயின்று பெற்ற சிவஞான நூற்புலமையைச் சிறிது கற்றவரும் பெரிதும் விரும்பத் தக்கவகையில் ஆசிரியர், அவர்கள் எழுதியிருப்பது மகிழ்ச்சி தருகிறது.

சிவஞான நூற்பொருளைப் பல பாடங்களாக வகுத்திருப்பதைப்பார்க்கும் போது, **திரு. காந்திமதிநாதப் பிள்ளையவர்கள்,** எழுதிய சிவஞானபோத உபந்நியாச பாடங்கள் என்ற நூல் நினைவில் எழுகிறது. அந்நூல் அவர்கள் காலத்திருந்த சைவச் சூழ்நிலைக்கு ஒத்தது; இப்போழ்து சைவவுலகில் எத்தனையோ மாறுபாடும் வேறுபாடும் தோன்றியுள்ளன. நினைவு செயல்களே திரிந்தும் திருந்தியும் உள்ளன.

இவற்றை மனத்திற்கொண்டு, ஆசிரியர் அவர்கள் சிவஞானச்செம் பொருளை இக்காலத்துக்கு ஒத்த நிலையில் அமைத்துத் தந்தமைக்குச் சைவவுலகு அவர்கட்குப் பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

இவ்வரிய நூலைச் சைவவுலகு விரைந்து ஏற்றுப் பயன் கொள்ளும் என நம்புகிறேன்.

''ஞானம் உண்டாக்குதல் நலமாகும் நாட்டிற்கே''
—திருமந்திரம்.

ஔவை. சு. துரைசாமி

சிவமுருகன் துணை

# முகவுரை

உலகத்தார் உய்யும்பொருட்டு இறைவன் அருளிச்செய்துள்ள நூல்கள் இரண்டுவகைப்படுவன. ஒன்று உலகியல் ஒழுக்கநெறி பற்றிய நூல்கள். அவை திருவள்ளுவதேவர் அருளிச் செய்துள்ள திருக்குறள் நூலும் அதுபோன்ற பிற நூல்களுமாம். அவற்றைத் தமிழ்ச் சான்றோர்கள் வேதநூல் என வழங்கினர். ''உலகியல் வேதநூல் ஒழுக்கம்'' என்று சேக்கிழார் பெருமான் திருவாய் மலர்ந்தருளினர். மற்றொரு வகை வீட்டியல் நெறிபற்றிய நூல்களாம். வீட்டியல் நெறியாவது வீட்டையடைய விரும்புவார் கைக்கொண்டு ஒழுகவேண்டியதோர் நெறியாம். அந்நெறியைத் தமிழ்ச் சான்றோர் மெய்ந்நெறி எனவும் சிவநெறி எனவும் வழங்குவர். நிலவு ''மெய்ந்நெறி சிவநெறியது'' என்பது சேக்கிழார் பெருமான் அருள்மொழியாம். அந்நெறிபற்றிய நூல்கள் மெய்கண்டதேவர் அருளிய சிவஞான போதமும் அதன்வழி வந்தனவும் அவை போன்ற சித்தாந்த நூல்களுமாம்.

உலகில் காணப்படும் ஒவ்வொரு சமயநெறியும் அவ்வவற்றிற்குரிய கோயில்களில் அவ்வச்சமய நெறிபற்றிய உண்மைகளை, அவ்வச் சமயநெறிபற்றி ஒழுகுவோர் அறிந்து கொள்வதற்குத் தகுந்த ஏற்பாடுகளை அமைத்து வைத்துள்ளது. ஆனால் சிவநெறிபற்றிய உண்மைகளை, அந்நெறிபற்றி ஒழுகுவோர் அறிந்து கொள்வதற்கு ஏற்ற ஏற்பாடுகள் அதற்குரிய கோயில்களில் அமைத்துவைக்கப்படவில்லை. ஆகவே அந்நெறி (சிவநெறி) பற்றிய உண்மைகளை ஆராய்ந்து அறிந்துகொள்ள எங்கள் ஊரில் (குலசேகரன்பட்டினம்) பல அன்பர்கள் கூடி முயன்றோம்.

அக் கூட்டத்திற்குத் தலைமை தாங்கியவர்கள், காலஞ்சென்ற உயர்திரு, ராம. ப. செந்திலாறுமுகம் பிள்ளையவர்கள் ஆவர். அடியேன் இலக்கணக் குறிப்புகளை விளக்கும் ஆசிரியராய் அமர்ந்தேன். திருவாளர் வ. முத்தையா பிள்ளையவர்கள், திரு ச. முத்துக்குமாரசாமி பிள்ளையவர்கள் முதலியோர் ஆராய்ச்சி விளக்கம் தருவோராய் அமைந்தனர். ஏனையோர் பாடம் கேட்கும் மாணவ அன்பர்களாய் அமைந்தனர்.

மெய்ந்நெறிபற்றிய நூல்களில் தலைசிறந்தது 'சிவஞான போதம்' என்னும் தனித்தமிழ் முழுமுதல் நூலாம். அது மெய்கண்ட தேவரால் அருளிச்செய்யப்பட்டது. அதற்குப் பெரியதோர் விளக்க உரை 'சிவஞான மாபாடியம்' எனப்படுவது. அவ்வுரை

யாசிரியர் மாதவச் சிவஞான முனிவர் எனப் புகழ்பெற்ற பெரியார். மேலே சொல்லப்பட்ட நூலாசிரியர் உரையாசிரியர் ஆகிய இரு பேராசிரியர்களும் உண்மைகளை ஏது எடுத்துக் காட்டுகளோடு நன்கு விளங்கியுள்ளனர். ஆகவே நாங்கள் அனை வரும் உண்மைகளை ஐயம்திரிபற உணர்ந்து கொண்டோம்.

உண்மை யுணர்ந்து இன்புற்ற அன்பர் பலரும் தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என எண்ணினர். எண்ணி, வாரம் தோறும் ஒவ்வொரு வெளியீடாகச் சிவநெறி உண்மைகளைப் பரப்ப விரும்பினர். அவ்விருப்பம் நிறைவேறும் பொருட்டு திரு. ராம. ப. செந்திலாறுமுகம் பிள்ளையவர்கள் கல்லச்சு ஒன்று உதவினார்கள். மற்றும் ஓரன்பர் திரு. ஆ. அறம்வளர்த்தநாத பிள்ளையவர்கள் அக்கல்லச்சில் எழுதிப்படி யெடுத்துப் பலர்க்கும் வழங்குதலாகிய பணிசெய்ய முன்வந்தனர். அடியேன் வாரத்துக்கு ஒன்று வீதம் பாடங்கள் எழுதிக்கொடுத்தலாகிய பணிசெய்ய முன்வந்தேன். இங்ஙனம் சில வாரங்கள் நிகழ்ந்துவரலாயிற்று.

பின்னர் சில அன்பர்கள் செய்த பொருளுதவியால் அச்சுக் கூடத்தில் அச்சடிக்கப்பெற்று வாரம் தவறாமல் வெளியீடுகள் வெளிவரலாயின. இங்ஙனம் ஓராண்டு முழுவதும் வெளிவந்த பாடங்கள் மொத்தம் 54 (ஐம்பத்து நான்கு) ஆயின. அவற்றைத் தொகுத்துவைத்துக் காப்பாற்றிப் பயன்பெற்றவர்களும் உளர். காப்பாற்றாமல் தொலைத்தவர்களும் உளர்.

அற்றைத் தொகுத்துவைத்துக் காப்பாற்றிப் பயன் பெற்றுள்ள சில அன்பர்கள் அவற்றைப் புத்தக வடிவில் காண விரும்பினர். புத்தக வடிவில் அமையுமாயின் அவை நிகழ் காலத்தும் வருங்காலத்தும் பலர்க்குப் பயன்படும் என்பது அவர்கள் கருத்து, இக்கருத்துடைய அன்பர்கள் திரு. சு. முத்து சாமிபிள்ளையவர்கள், (உயர்நிலைப்பள்ளியாசிரியர் திருநெல்வேலி.) திரு. மா. மகாலிங்கம் பிள்ளையவர்கள் (உயர்தரத் தொடக்கப் பள்ளியாசிரியர், குலசேகரன்பட்டினம்) முதலியோர் ஆவர்.

அவர்களில் திரு. மா. மகாலிங்கம் பிள்ளையவர்களுடைய முயற்சியின் பயனாக இப்பொழுது அன்பர் திரு. சு. லட்சுமண பிள்ளையவர்கள் தம் கைப்பொருட் செலவில் அச்சடித்துப் புத்தக வடிவில் அப்பாடங்களை வெளியில் கொண்டுவர முன்வந்துள் ளார்கள். அவர்கள் தங்கள் ஊரில் (குலசேகரன்பட்டினத்தில்) அச்சுக்கூடம் இல்லாமையால் இவ்வூரில் ஓர் அச்சுக்கூடத்தாரிடம் முன்பணம் கொடுத்து வேலைசெய்ய ஏற்பாடு செய்துள்ளார்கள்.

அங்ஙனம் செய்து ஓர் ஆண்டிற்கு மேலாகியும் வேலைநடைபெறாமல் கிடந்தது. பின்னர் அப்பொறுப்பை இவ்வூர் திருவாளர் E.K.சேது ராமலிங்கம் அவர்களிடம் ஒப்படைத்தார்கள். அவர்களுடையநன் முயற்சியால் இப்பொழுது புத்தகவடிவம் பெற்று வெளிவருகிறது.

மேலே சொல்லப்பட்ட அன்பர் அனைவரும் பொருளவாவும் புகழவாவும் சிறிதும் இன்றி உலகத்தார் நன்மை ஒன்றையே கருதி உழைத்துள்ளார்கள். ஆதலால் அவற்றையெல்லாம் அருட் செயலாகவே அறிஞர் அறைகுவர். இங்ஙனம் இறைவன் திரு அருளால் வெளியாகி வருகின்ற இப் புத்தகங்களை எல்லோரும் வாங்கிப் படித்துப் பயன் அடையுமாறு எல்லாம் வல்ல அவ் விறைவன் திருவடிமலர்களில் வணக்கம் செய்து வேண்டுகிறேன்.

'வேல் மன்றம்'
சிதம்பரநகர்
5—10—64.

அன்பன்,
**வீ. குமாரவேலு,**

சித்தாந்த வித்தகர் சீர்சால் குமரவேல்
வைத்தநூ ருென்பான் வளர்பாடம்—புத்தகமாய்
நல்லார் முயற்சியினால் நண்ணுமிந்நான் மெய்ந்நெறியோர்
பல்லாற்றுன் வாழ்க படித்து.

அன்புள்ள,
**திருவள்ளுவரகம், ப. இராமநாதன்,**
சென்னை, 5—1—1965.

# பாடம் 1.

## நமது சமயமும் சமய நூல்களும்

நமது சமயம் சித்தாந்த சைவமாகும்.

நமது சமய நூல்கள் பன்னிரண்டு திருமுறைகளும் பதினன்கு சாத்திரங்களும் ஆகும்.

## பன்னிரண்டு திருமுறைகளாவன—

1. திருஞான சம்பந்த சுவாமிகள் அருளிய தேவாரப் பதிகங்கள் முதல் மூன்று திருமுறைகள்.
2. திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய தேவாரப் பதிகங்கள் அடுத்த மூன்று திருமுறைகள்.
3. சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய தேவாரப் பதிகங்கள் ஏழாம் திருமுறை.
4. மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய திருவாசகம் எட்டாம் திருமுறை.
5. திருமாளிகைத் தேவர் முதலிய ஒன்பதுபேர் பாடிய திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் ஒன்பதாம் திருமுறை.
6. திருமூலர் அருளிய திருமந்திரம் பத்தாம் திருமுறை.
7. திருவாலவாயுடையார் முதலிய பன்னிரண்டுபேர் பாடிய பாடல்கள் பதினொன்றாம் திருமுறை.
8. சேக்கிழார் சுவாமிகள் அருளிய திருத்தொண்டர் புராணம் (பெரிய புராணம்) பன்னிரண்டாந் திருமுறை. ஆகப் பன்னிரண்டு திருமுறைகளாம்.

## பதினன்கு சாத்திரங்களாவன

| | சாத்திரம் | | ஆசிரியர் |
|---|---|---|---|
| 1. | திருவுந்தியார் | ... | திருவியலூர் உய்யவந்த தேவர் |
| 2. | திருக்களிற்றுப்படியார் | — | திருக்கடவூர் உய்யவந்த தேவர் |
| 3. | சிவஞானபோதம் | — | திருவெண்ணெய் நல்லூர் மெய்கண்ட தேவர் |
| 4. | சிவஞான சித்தியார் | — | திருத்துறையூர் அருணந்திதேவர் |
| 5. | இருபாவிருபஃது | — | ,, ,, |
| 6. | உண்மை விளக்கம் | — | திருவதிகை மனவாசகங்கடந்தார் |

7. சிவப்பிரகாசம் — உமாபதி சிவாச்சாரியார்
8. திருவருட்பயன் — ,, ,,
9. வினா வெண்பா — ,, ,,
10. போற்றிப்பஃறொடை — ,, ,,
11. கொடிக் கவி — ,, ,,
12. நெஞ்சுவிடு தூது — ,, ,,
13. உண்மை நெறிவிளக்கம் — ,, ,,
14. சங்கற்ப நிராகரணம் — உமாபதி சிவாச்சாரியார்

---

## பாடம் 2.

## முப்பொருள் உண்மை.

உடம்பு, உயிர், கடவுள் ஆகிய மூன்று பொருள்கள் உள்ளன என்பது நம் தமிழ் ஆன்றோர் கண்ட முடிவு.

உடம்பைப் பாசம் என்றும், உயிரைப் பசு என்றும், கடவுளைப் பதி என்றும் கூறுதல் ஆன்றோர் மரபு.

உடம்பு உயிரைக் கட்டியிருப்பதால் அதனைப் பாசம் என்பர். உயிர் உடம்பால் கட்டப்பட்டிருப்பதால் அதனைப் பசு என்பர். கடவுள் உயிர்களின் கட்டுகளை அறுத்து விடுவிப்பதால் அவரைப் பதி என்பர். பதி எனினும் தலைவன் எனினும் ஒன்றே.

பானை சட்டி முதலியவை மண்ணிலிருந்து குயவனால் செய்யப்படுகின்றன. அது போல உடம்பும், உலகமும், உலகப் பொருள்கள் எல்லாமும், மாயை என்று சொல்லப்படும் ஒரு முதற் பொருளிலிருந்து கடவுளாற் செய்யப் படுகின்றன.

''இல்லது தோன்றாது'' என்பது ஆன்றோர் கண்ட முடிவு. ஆதலால் பதி, பசு, பாசம், இம் மூன்று பொருள்களையும் அநாதிப் பொருள்கள் என்று சொல்வார்கள். அநாதி என்ற சொல்லுக்குத் தொடக்கம் இல்லாதது என்று பொருள்.

இம் மூன்று பொருள்களில் பாசத்தை நான்கு வகையாக்கி அநாதியான பொருள்கள் ஆறு என்றும் கொள்வார்கள்.

அவை இருள், கருமம், சுத்தமாயை, அசுத்தமாயை எனப் படும்.

அவற்றுள் இருள், உயிர் கட்டுறுதற்குக் காரணமாய் உயிரைப் பற்றியுள்ள அறியாமையாகிய குற்றம். அதை ஆணவம் என்றும் கூறுவர்.

கருமம், இன்பதுன்பங்களுக்குக் காரணமாகிய வினை.

அசுத்த மாயை, மயக்க உணர்விற்குக் காரணமாய் இருக்கும்.

சுத்தமாயை, தெளிவு உணர்ச்சிக்குக் காரணமாய் இருக்கும்.

''ஏகன் அநேகன் இருள் கருமம் மாயை இரண்டு ஆக இவை ஆறு ஆதிஇல்''— திருவருட்பயன்

பொருள்:— கடவுள், உயிர், ஆணவம், வினை, சுத்தமாயை, (தூயமாயை) அசுத்தமாயை (தூயதல்மாயை) ஆகிய இவை ஆறும் தொடக்கம் இல்லாதவை.

---

## பாடம் 3.

## உலகம் பிறப்பு, இருப்பு, இறப்பு ஆகிய மூன்று தொழில்களையுடையது.

தமிழ் ஆன்றோர்கள் மூன்று பொருள்கள் உள்ளன எனத் துணிந்தனர் அவை கடவுள், உயிர், உடம்பு என்பன. அவற்றுள் உடம்பு ஒன்றே காணப்படும் பொருள். அவ்வுடம்பு அறிவில்லாதது. உயிர்கள் நீங்கிய உடம்பில் இவ்வுண்மையைக் காணலாம். இப்படிப்பட்ட அறிவில்லாத பொருள்களின் தொகுதியே உலகம் எனப்படும். ஆகவே உலகம் என்பது பல பொருள்களின் தொகுதி (கூட்டம்). அந்தப் பல பொருள்களும் தோன்றி நின்று அழியும் தன்மையுடையன.

அவற்றுள் சிலவற்றில் ஒன்று தோன்ற ஒன்று நிற்க, ஒன்று அழிதலைக், காண்கிறோம்.

மக்கள் உடம்பில் ஒரே காலத்தில் ஓரிடத்தில் ஒன்று பிறக்கிறது ஓரிடத்தில் ஒன்று இருக்கிறது ஓரிடத்தில் ஒன்று அழிகிறது

வேறு சில பொருள்கள் சாதிபற்றி ஒரே காலத்தில் தோன்றி, ஒரே காலத்தில் நின்று, ஒரே காலத்தில் ஒருங்கே அழிதலையும் காண்கிறோம்.

சிலந்திப்புல் போன்ற சில செடிகள் மழை காலத்தில் ஒருங்கே தோன்றிச் சிறிது காலம் நின்று, கோடை காலத்தில் ஒருங்கே மாய்ந்து விடுகின்றன.

உலகில் பொருள்கள் யாவும் தனித்தனி தோன்றி நின்று அழியும் தன்மையுடையன, அத்தன்மை உடைமையால் அவை ஒரு

சாதிப் பொருள்களாகின்றன. ஆதலால் உலகம் முழுதும் ஒரு காலத்தில் ஒருங்கே அழியும் என்று ஆன்றோர்கள் துணிந்தனர்.

அவ்வாறு ஆதலின் உலகம் பிறப்பு, இருப்பு, இறப்பு ஆகிய முத்தொழில்களை உடையது என்று நமது சமய நூல்கள் கூறுகின்றன.

## பாடம் 4.

## உலகத்திற்கு முதற்காரணம் மாயை.

கடவுள், உயிர், உலகம் என்ற இம் மூன்று பொருள்களுள், உலகம் ஒன்றே நம்முடைய ஐம்பொறிகளால் அறியப்படுவது. அவ்வுலகம் அறிவில்லாத பொருள் (சடப்பொருள்). அதனிடத்துப் பிறப்பு, இருப்பு, இறப்பு ஆகிய முத்தொழில்கள் நிகழ்கிறன.

உலகம் அழிந்தாலும், அது உள்ள பொருளே, உலகம் இல்லாத பொருளாயின் அதற்குத் தோற்றம் கிடையாது. இல்லது தோன்றுதென்பது ஆன்றோர் கண்ட முடிவு. உள்ள பொருள்களுக்கு இரண்டு நிலைகள் உண்டு ஒன்று காரணநிலை. ஒன்று காரியநிலை. காரணநிலையில் சத்தி வடிவமாய் இருக்கும். பஞ்சிலிருந்து வேட்டி, சேலை முதலிய அணிகள் தோன்றுகின்றன. மண்ணிலிருந்து துணிகள் தோன்று. மண்ணில் துணி தோன்றக் கூடிய தன்மை இல்லை. பஞ்சில் துணி உண்டாகக்கூடிய தன்மை உள்ளது. அத்தன்மையே துணிகளின் காரண வடிவு

அதுபோல உலகம் தோன்றுதற்கு ஒரு முதற்பொருள் உண்டு. அப்பொருளில் உலகம் உண்டாதற்குரிய ஒரு சத்தியும் உண்டு. அந்தச் சத்தியே உலகத்தின் காரண வடிவு.

தோன்றிய உலகம் மாய்ந்து சத்தி வடிவாய் ஒடுங்குதற்கு; அந்த முதற்பொருளே நிலைக்களமாய் இருத்தலால், அதனை மாயை என்ற பெயரால் வழங்கினர். ஆகவே உலகத்திற்கு முதற் காரணம் மாயை என்று நம் சமய நூல்கள் கூறுகின்றன.

பின் அம்மாயையே உலகம் தோன்றுதற்கும் நிலைக்களமாதலால் அதனை மாயா என்றும் கூறுவர்.

| | | |
|---|---|---|
| மாய் + ஆ | = | மாயா |
| மாய்தல் | = | ஒடுங்குதலாம் |
| ஆதல் | = | உண்டாதலாம் |

எனவே மாயா என்பது ஒடுங்குதற்கும் உண்டாதற்கும் நிலைக்களமான பொருள் எனப் பொருள்படும்

---

* சத்து என்ற தமிழ்ச் சொல், வலிய பகுதியென்று பொருள் படும். சத்துடையது சத்தி.

## பாடம் 5.

## முத்தொழிற்கும் முதல்வன் அரனே!

உலகம் அறிவில்லாத பொருள், அதனிடத்து மூன்று தொழில்கள் நிகழ்கின்றன. அறிவில்லாத பொருள்கள் தாமே தொழிற்படா. பஞ்சு தானே வேட்டியாகாது. அறிவுடைய ஒருவன் பஞ்சிலிருந்து வேட்டியை ஆக்கினன். அதுபோல மாயையிலிருந்து உலகத்தை உண்டாக்கி, நிறுத்தி, அழிக்க அறிவுடைய ஒருவன் வேண்டும். அவனே உலகிற்கு முதற் கடவுள் ஆவான்.

இப்பொழுது உலகில் வாழையடி வாழையாய் ஒன்று தோன்ற, ஒன்று நிற்க, ஒன்று அழிந்துகொண்டு இருக்கிறது. இந்நிலையில் மூன்று தொழிற்கும் மூன்று கடவுளர் உண்டெனப் புராணங்கள் கூறுகின்றன. அவர்களில் முதற்கடவுள் யார் என்று நம்மால் துணிய முடியவில்லை.

உலகம் முழுவதும் ஒருங்கே ஒருகாலத்து அழியும் என்பது அறிஞர் அனைவர்க்கும் ஒப்ப முடிந்த முடிவு. அங்ஙனம் அழியும் காலத்து அழித்தற் கடவுள் ஒருவனே ஆற்றலோடு இருத்தல் வேண்டும். ஏனைய இருவரும் ஆற்றலோடு நின்றாராயின், முழுவதும் அழிதல் கூடாததாகும். ஆகவே உலகம் மாயையில் ஒடுங்குதற்குக் காரணனாய் இருந்த அரனே முழுமுதற் கடவுள் ஆவான். அவனே உலகத்தை மீளவும் படைத்து நிறுத்துவான். அரசன் தன்னுடைய ஆணையை மந்திரி, படைத்தலைவன் முதலானவரிடத்து வைத்து ஆட்சி நடத்துவது போல அரனும் அயன், மால் முதலியவர்களிடம் தன் ஆணையை வைத்து உலகத்தைத் தோற்றி நிறுத்துவான். ஆதலால் அயன், மால் முதலியோரும் அரனுடைய ஏவல் வழி நின்று தொழில் செய்வோர் ஆவர்.

'' ஆக்கி எவையும் அளித்து ஆசுடன் அடங்கப்
போக்கு மவன் போகாப் புகல் ''

— திருவருட்பயன்.

பொருள்:— உலகங்கள் எல்லாவற்றையும் படைத்துக் காத்து அழித்து உயிர்களின் மலத்தைப் போக்கும் கடவுள் ஒருவனே உயிர்கட்குப் புகலிடம்.

# பாடல் 6.

## முதல்வனது ஆணை உயிர்களோடும் உலகத்தோடும் ஒன்றிநின்று தொழில் செய்யும்.

உலகம் முழுவதையும் ஒரு காலத்து ஒருங்கே ஒடுக்கிய அரனே மீளவும் உலகத்தைத் தோற்றி நிறுத்துவான். அங்ஙனம் தோற்றி நிறுத்துங்கால் அரசன் தன் ஆணையை அமைச்சர் முதலாயினர் மாட்டு வைத்து அரசாட்சி நடத்துவது போல அரனும் தன் ஆணையை அயன் முதலியோர் மாட்டுவைத்துத் தொழில் நிகழ்த்துவான்.

ஆணை என்பது வல்லமை எனப் பொருள்படும். வல்லமை யாவது, ஒரு தொழிலை ஆற்றவல்ல சத்தியாம். அரனது ஆணை அயன் முதலிய உயிர்கள் மாட்டு நின்று தொழில் செய்யுங்கால் அவர்களோடு ஒன்றி நிற்கும்.

காந்த சத்தியானது இரும்புத்துண்டில் ஒன்றி நின்று தொழில் செய்யும். அப்பொழுது இரும்பே அத்தொழில் செய்வது போலத் தோன்றும். பொருள் தன்மைகளை ஆராய்ந்தவர்க்கே இரும்பின் கண்ணே காந்த சக்தி நின்று தொழில் செய்வது புலப்படும்.

அதுபோலவே அரனது சத்தியும் அயன் முதலியோர் மாட்டு ஒன்றி நின்று தொழில் செய்யும். இங்ஙனம் ஒன்றி நிற்றலை வடமொழியார் அத்துவிதநிலை என்பர்

அத்துவிதம் என்ற வடசொல் இரண்டல்லாதது எனப் பொருள்படும். அது இரண்டு பொருள்கள் கலப்பினால் ஒன்று போல் நிற்கும் தன்மையை உணர்த்தும்.

அந்நிலையில் இரண்டு பொருள்கள்
கலப்பினால் ஒன்றாயும்
பொருள் தன்மையினால் வேறாயும்
தொழில் செய்யுங்கால் உடனாயும் நிற்கும்

இவ்வாறே மற்ற உலகப்பொருள்களோடும் இறைவனுடைய ஆணை ஒன்றி நின்று அவற்றைத் தொழிற்படுத்தும்.

அரனது ஆணை ஒன்றி நிற்குங்கால் தான் அரனது சத்தி என்பதை அறியாமையோடு கூடிய உயிர்க்குப் புலப்படுத்தாமையால் அதனை மறைத்தற் சத்தி என்பர், அறியாமை நீங்கிய உயிர்க்கு அது தன்னைப் புலப்படுத்துங்கால் அதனையே அருட் சத்தி என்பர்.

## பாடம் 7.

## முதல்வன் உயிர்களோடு ஒன்ருயும், வேருயும், உடனுயும் ஒட்டி நிற்பன்.

முதல்வன் எல்லா உயிர்களோடும் ஒன்றி நின்று தொழில் செய்கின்ருன். ஒன்றுதல், ஒற்றுதல், ஒட்டுதல் என்பன ஒரு பொருட் சொற்கள்.

முதல்வன் உயிர்களோடு ஒன்றி நிற்குங்கால் ஒன்ருயும், வேருயும், உடனுயும் ஒட்டி நிற்கின்ருன்.

இவற்றுள் ஒன்ருய் ஒட்டுதலுக்கு, உயிர் உடம்போடு ஒட்டி நிற்றலை உவமை கூறுவர். ஒருவன் தன் கருத்தை வேருென்றில் செலுத்தி நிற்கும்போது அவனுக்கு உடம்பில் நிகழும் பசி தோன்றுவதில்லை. பின் அவன் கருத்து அதனினின்றும் நீங்கி உடம்பை ஒட்டுங் காலத்து, அப்பசியை உணருகின்ருன். உணருங் கால் உடம்பில் நிகழும் பசியைத்தனக்கு நிகழுகின்றதாகச்சொல்லு கின்ருன். அதற்குக் காரணம் தான் வேறு, உடம்பு வேறு என்ற வேற்றுமை உணர்வின்றி, உடம்பே தான் என்ற ஒற்றுமை உணர்வோடு இருப்பதுதான். இவ்வாறே இறைவனும் எல்லா உயிர்களோடும் ஒற்றுமையாய் ஒட்டி நின்று உயிர்கட்கு வேண்டுவனவற்றை அறிகின்ருன். இங்ஙனம் ஒட்டி நிற்றலை ஒன்ருய் நிற்றல் என்று கூறுவர்.

இனி வேருய் ஒட்டி நிற்றலுக்குக் கண்ணின் தன்மையும் ஒளியின் தன்மையும் ஒட்டி நிற்றலை உவமை கூறுவர். கண்ணின் தன்மை காணுந் தன்மை, ஒளியின் தன்மை கண்ணுக்குக் காட்டுந் தன்மை. இந்தஇருவேறு தன்மைகளும் ஒட்டிநிற்குங் காலத்துக் கண்ணுக்குக் காட்சி நிகழ்கிறது. அதுபோல உயிர்களின் அறியுந் தன்மையும், இறைவனின் அறிவிக்கும் தன்மையும், ஆகிய இரு வேறு தன்மைகளும் ஒட்டி நிற்கும்போது உயிருக்கு அறிவு நிகழ்கிறது. இங்ஙனம் ஒட்டி நிற்றலை வேருய் ஒட்டி நிற்றல் என்பர்.

இனி உடனுய் ஒட்டி நிற்றலுக்கு உடம்பிலுள்ள கை முதலிய உறுப்புகளோடு உயிரறிவு ஒட்டி நிற்றலை உவமை கூறுவர். உயிர றிவு கையோடு ஒட்டி நின்று செலுத்துதலால் அது தொழில் செய் கிறது. அங்ஙனம் தொழில் செய்யுங்கால் கைக்கு உண்டாகும் நன்மை தீமைகள் ஒட்டி நின்று செலுத்திய உயிரறிவுக்கு நிகழ்தல்

இல்லை. அதுபோல முதல்வன் உயிர்களின் வினைப்பயன்களை நுகருமாறு அவற்றோடு ஒட்டி நின்று அவற்றைச் செலுத்து கின்றான். அப்போது உயிர்களின் அறிவு, இன்ப துன்பங்களில் அழுந்துகிறது. முதல்வன் உடனாய் இருந்தாலும் அவனது அறிவு அங்ஙனம் அழுந்துவதில்லை. இவ்வாறு ஒட்டி நிற்றலை உடனாய் ஒட்டி நிற்றல் என்பர்.

---

## பாடம் 8.

## முதல்வன் உயிர்களின் வினைக்கீடாக உலகைப் பலவேறு வகைப்படப் படைக்கின்றான்.

முதல்வன் உயிர்களோடு ஒன்றி நிற்றலால், உயிர்களின் அறிவு, இச்சை, செயல்கள் விளக்கம் பெறுகின்றன.

உயிர் அறியாமையோடு கூடியிருத்தலால் ஒரு பொருளை உள்ளபடி அறியாமல் திரிபு காட்சியாக அறிகிறது. பின் அதனை அடைய அவாவுகின்றது. அடைந்த பின்னர் அதனைப் பலவாறு தொழிற்படுத்துகின்றது.

இம்மூன்று நிகழ்ச்சிகளையும் அறியாத பருவத்தில் உள்ள சிறு குழந்தைகளிடம் காணலாம். ஒரு பொருளையடைய அவாவுங் கால், அந்தப் பொருளால் இன்ன பயனை அடையலாம் என்ற கருத்தோடு அவாவுவதில்லை.

இராமன் சந்திரனை வேண்டி அழுதான் என்று ஒரு கதை படிக்கிறோம். அவன் சந்திரனால் ஒரு பயனை அடையக் கருதி அதை வேண்டவில்லை. அவனுக்கு வேறு எத்தனையோ உயர்ந்த பொருள் களைக் கொடுத்தும் அவன் அழுகை நிற்கவில்லை. பின் சுமந்திரன் கண்ணாடியில் அதன் உருவத்தைக் காட்டியதும் அழுகை நின்று விட்டது. இத்தகைய அவாவே அறியாமையோடு கூடிய உயிர்களி டத்து நிகழ்கிறது.

இந்த அவாவே வினைக்கு வித்து என்று சொல்லப்படும். உயிர் தோறும் வெவ்வேறு வகைப்பட அவா நிகழ்வதால் முதல்வன் உலகைப் பலவேறு வகைப்படப் படைக்கின்றான்.

ஆதலால் உயிர்களின் அவாவே உலகத் தோற்றத்துக்கு வித்தாய் உள்ளது.

இவ்வுண்மையை,

அவாவென்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து''

என்னும் திருக்குறளால் தெரிந்து கொள்ளலாம்.

பொருள்:— எல்லா உயிர்கட்கும் எல்லாக் காலத்திலும் கெட்டுப் போகாமல் வருகின்ற பிறப்பினை விளைவிக்கும் வித்து அவாவென்றே சொல்வர் நூலோர்.

## பாடம் 9.

## அவாக் காரணமாகவே இரு வினைகள் நிகழ்கின்றன.

உயிர்கள் அவாவிய பொருள் முதல்வன் அருளால் கிடைக்கப் பெற்றதும், அப்பொருளைத் தன் அறியாமையால் ''யான்'' என்றும் ''எனது'' என்றும் பற்றிக் கொள்ளும்.

சாணத்தைப் பொறுக்குகிற பிள்ளைகள் ஒரு இடத்தில் மாட்டின் சாணம் கிடப்பதைக் காணுகிறார்கள். அந்த இடம் பிறருடைய இடம். சாணம் பிறர் மாட்டுச் சாணம். என்றாலும், அதனைக் கண்ட பிள்ளைகள் ''யான் கண்டேன்;' எனக் கேஉரியது'' என்று உரிமை கொண்டாடிச் சண்டையும் போடுகிறார்கள்

அது போலவே உயிர்களும், இறைவன் அருளால் கூட்டிய பொருள்களைத் தம்முடைய பொருள்கள் என்று பற்றிக் கொள்ளுகின்றன. உண்மையில் அப்பொருள்கள் இவற்றினுடையன அல்ல. அப்பொருள்களைக் கூட்டுதற்கு நிலைக்களமான உடம்பும் இவற்றினுடையன அல்ல. இவை இரண்டும் முதல்வன் அருளால் உயிர்களுக்குக் கிடைத்தன. இவ்வுண்மையை அறியாமையால், உயிர்கள் உடம்பைத்தான் என்றும், மற்றும் பொருகளைத் தனது என்றும் பற்றுதல் செய்கின்றன.

இப்பற்றுதல் காரணமாகவே இன்பமும் துன்பமும் விளையும். பற்றப்பட்ட பொருள் நன்றாயிருக்கும்பொழுது உயிர் இன்புறும். அதற்குக் கேடு வரும்போது துன்புறும் உயிர் தன்னால் பற்றப் பட்ட பொருளுக்கு நன்மை செய்யும் பொருளை விரும்பும்: கேடு செய்யும் பொருளை வெறுக்கும். அவ்விருப்பு வெறுப்புக் காரணமாகவே உயிர் வினைகளைச் செய்யும் அவ்வினைகள் இரண்டு வகைப்படும். அவை நல்வினை தீவினை என்பன. நல்வினை

யாவது பிற உயிர்கட்கு நன்மை செய்தல். தீவினையாவது பிற உயிர்கட்குக் கேடு செய்தல்.

கீரை முதலிய சில விதைகள் விரைவில் பலன் தருவன. நெல் முதலிய பயிர்கள் சிறிது காலம் சென்று பயன் தருவன. மாமரம் முதலியவை நீடித்த காலம் சென்று பயன் தருவன அதுபோலச் சில வினைகள் உடனே பலன்தரும். சில வினைகள் சிறிதுகாலம் சென்று பலன் தரும்.

தெரிந்தோ தெரியாமலோ தீயில் கைவைத்துவிட்டால் அது சுட்டுவிடும். அதுபோல அறிந்தோ அறியாமலோ நாம் செய்யும் நல்வினை தீவினைகள் நமக்குப் பலன்களைத் தந்துவிடும்-

## பாடம் 10

## இருவினைகளையும் இறைவனே ஏற்றுக் கொண்டு உயிர்கட்குப் பயன் தருகிறான்

வினை, செய்யும்போது நல்வினை என்றும் தீவினை என்றும் பெயர் பெறும். இதனை ஆகாமியம் என்பர்.

அவ்வினை பயன் தரும்வரை நுட்பமாய்க் கிடக்கும் நிலையில் புண்ணியம் என்றும் பாவம் என்றும் பெயர் பெறும் இதனைச் சஞ்சிதம் என்பர்

பின் பயன் தருகிற காலத்தில் இன்பம் என்றும் துன்பம் என்றும் பெயர் பெறும், இதனைப் பிராரப்தம் என்பர். அதனையே பழவினை என்றும் ஊழ் என்றும் சொல்வர்.

பழவினை, முயற்சி வாயிலாகவே பயன் தரும். அங்ஙனம் பயன் தருமிடத்துச் சிறு முயற்சிக்குப் பெரிய பலனையும் பெரிய முயற்சிக்குச் சிறிய பலனையும் விளைவிக்கும். முயற்சி அளவுக்குப் பயன் விளைவது பழவினையின் பயனாகாது.

முயற்சி செய்து வாழ்வதற்காகவே உடம்பையும் துணைப் பொருள்களையும் இறைவன் படைத்திருக்கிறான். முயற்சியில் தூண்டுவதற்காகவே பசி தாகம் முதலிய நோய்களையும் இன்பத் திற்குக் காரணமான புலன்களையும் படைத்திருக்கிறான். ஆத லால் ஒரு உயிரும் முயற்சியின்றியிருத்தல் முடியாததொன்று.

இவ்வினைகளெல்லாம் தாமே பயன்தரா. உழவின் பயனை உழவரகிய வினை கொடுக்காது. நிலம் அதனை ஏற்று உழவுக்குத் தக்க பலன் தரும். அதுபோல உயிர்கள் செய்யும் வினைகளும் தாமே பலனைத் தரமாட்டா, உயிர்களோடு ஒட்டி நிற்கிற முதல் வன் அவற்றை ஏற்றுக்கொள்கிறான். ஏற்றுக்கொண்டு அவ்வினைகட்

கீடான இன்ப துன்பப் பயன்களை உயிர்கட்கு ஊட்டுகிருன். அங்ஙனம் ஊட்டுங்கால், உயிர்கட்கு அறியாமையால் ஏற்பட்ட ''யான்'' ''எனது'' என்னும் பற்றுச் சிறிது சிறிதாக அற்றுக் கொண்டே வரும். உடன் நிகழ்ச்சியாக அறிவும் சிறிதுசிறிதாக வளர்ந்துகொண்டே வரும்.

## பாடம் 11

## வினைப்பயன் நுகர்தற்பொருட்டு உயிர்களுக்கு இறப்பும் பிறப்பும் நிகழும்

இறைவனுடைய ஆணை எனப்படும் சத்தி வினைப்பயன்களை உயிர்கட்கு ஊட்டுதற் பொருட்டு ஏற்ற உடம்புகளை ஆக்கிக் கூட்டும். அவ்வுடம்பில் உயிர் நுகர்தற்குரிய வினைப்பயன்களை உயிர்கட்கு ஊட்டி முடிந்தவுடன் அவ்வுடம்பு உயிரினின்றும் பிரிக்கப்படும்

அங்ஙனம் பருவுடம்புபிரிக்கப்பட்டகாலத்தும், நுண்ணுடம்பு அழியாது உயிரைப்பற்றி இருக்கும். அந்த நுண்ணுடம்பினின்றும் விண்ணுலகத்திற்குச் சென்று நல்வினைப்பயன்களை நுகர்தற் பொருட்டுப் பூதசார உடம்பு தோன்றும் அவ்வுடம்பைப்பற்றி நின்று அவ்வுடம்பில் நுகர்தற்குரிய நல்வினைப்பயன்களை உயிர் நுகரும்.

அவ்வாறே தீவினைப்பயன்களை நிரயத்தினேற்சென்றுநுகர்தற் பொருட்டுப்பூதசாரஉடம்பு, அந்த நுண்ணுடம்பிலிருந்துதோன்றும் அதனைப்பற்றிநின்று அவ்வுடம்பில் நுகர்தற்குரிய தீவின்ப்பயன் களை உயிர் நுகரும்.

பின்னர் நிலவுலகில் நுகர்தற்கு உரிய நல்வினை தீவினைப் பயன்களை நுகர்தற் பொருட்டுப் பருவுடம்பு தோன்றும் அவ் வுடம்பைப்பற்றிநின்று அவ்வுடம்பில் நுகர்தற்குரிய வினைப்பயன் களை முயற்சிதுணையாக உயிர்நுகரும்.

நிலவுலகில் உயிர் முயற்சி செய்தலால் புதிய வினைகள் ஏறும். புதிது புதிதாக உடம்புகளை உயிர்கட்குக் கூட்டுவது இறைவனுடைய சத்தியே. ஒரே நுண்ணுடம்பிலிருந்து பலவேறு வகைப்பட்ட உடம்புகளை உண்டாக்குதல் ஒரே பொன்னிலிருந்து பலவேறு வகைப்பட்ட அணிகலன்களைப் பொற்கொல்லன் உண் டாக்குவது போலாம்.

பழைய வினைப்பயன்களை முயற்சி துணையாக நுகரும் போதே புதியவினை ஏறுதலால் உயிர்கட்கு இறப்பும் பிறப்பும் மீள மீள நிகழ்து கொண்டேஇருக்கும்

# பாடம் 12

## முதல்வன் தனது ஆணை எனப்படும் சத்தியின் நீக்கமின்றி நிற்பன்

ஒரு பொருளின் சத்தி அப்பொருளின் வேறு அன்று ஆயினும் ஒருவாற்றால் வேறாதற்கு உரிமையுடையது. தீயின் சுடுதற் சத்தி தீயின் வேறு அன்று, தீயின் நீக்கமின்றி நிற்கும்.

மிகக் குளிர்ந்த கைலாசமலை போன்ற இடங்களில் அரிசியைத் தண்ணீரில் போட்டுச் சமைப்பதற்கு எவ்வளவு தீயிட்டெரித்தாலும் சமையல் ஆவதில்லை. மற்ற இடங்களில் அத்தீ தண்ணீரோடு கூடிய அரிசியைச் சோறாகச் சமைப்பதைப் பார்திருக்கிறோம். அத்தீ, குளிர்ந்த இடங்களில் கேடின்றி எரியினும் அதனின் நீக்கமின்றி நிற்கிற சமைத்தற் சத்தி தன் தொழிலைச் செய்யவில்லை. அத்தீ மிகுந்த குளிரால் தன் தொழிலைச் செய்ய முடியாமல் தடுக்கப்பட்டுள்ளது. அப்படித் தடுக்கப்பட்ட காலத்தும் தடுக்கப்படாத காலத்தும் தீ ஒரே தன்மைத்தாக எரிந்து கொண்டிருக்கிறது. ஆதலால் மிகுந்த குளிர் உள்ள இடத்து மறைந்தும், குளிர் இல்லாத இடத்து விளங்கியும் சமைத்தற்றொழிலுக்குக் காரணமாவதோர் சத்தி தீயின் வேறாய் அதனின் நீக்கமின்றி நிற்கும் என்பது துணியப்படும்.

இவ்வாறே ஒவ்வொரு பொருளிலும் ஒவ்வொரு சத்தி அதனின் நீக்கமின்றி நிற்குமென்று ஆன்றோர் துணிந்தனர். அது போல இறைவனிடத்திலும் ஆணை எனப்படும் சத்தி அவனின் நீக்கமின்றி நிற்கும், முதல்வன் அறிவுப் பொருள். ஆகவே, முதல்வனது படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழிலையும் செய்வான்.

முதல்வன் ஆணையாகிய சத்தி முதல்வனின் வேறன்றி அவனிடத்து அடங்கி நிற்றலான் அவ்வாணையை ஐந்தொழிற்கும் முதல்வி என்றும் ஆன்றோர் வழங்குவர்.

இதனைக் குறிக்கவே அம்மையப்பர் திருவுருவைக் கோவில்களில் வழிபாட்டிற்குரியதாக்கினர்.

ஒரு பொருளின் இத்தகைய சத்தியைத் 'தாதான்மிய சத்தி' என்று வடமொழியார் கூறுவர். அதன் பொருள் 'அது தானாதல்' என்பதாம். சத்தி எனினும் ஆற்றல் எனினும் ஒக்கும்.

## பாடம் 13.

## எண்ணில்லாத உயிர்கள் அறிவு வகையால் ஆறு வகைப்படும்.

உயிர்கள் உடம்போடு கூடி நின்று, புறப்பொருள்களை அறிந்து தொழில் செய்கின்றன. மேலும் சில பொருள்களை இச்சிக்கின்றன. ஆகவே உயிர்கள் அறிவு, இச்சை, தொழிலாகிய மூன்று தன்மைகள் உள்ளன என்று தெரிகின்றோம்.

வெவ்வேறு உயிர்களிடத்தில் வெவ்வேறு அறிவும், தொழிலும், இச்சையும் நிகழ்கின்றன. ஆதலால் உயிர்கள் பல என்று உணருகிறோம்.

உயிர்கள் உடம்போடு கூடி நின்றே அறிய வல்லன.

சில உயிர்கள் தொடுதலை உணரும் மெய்ப் பொறியை மாத்திரம் உடைய உடம்போடு கூடி வாழுகின்றன. அவற்றை ஓரறிவுயிர் என்பர். மரம், செடி, கொடி முதலியன இவ்வகையைச் சார்ந்தன.

நத்தை, சிப்பி முதலானவை மெய்ப் பொறியோடு சுவையை உணரும் பொறியாகிய நாவையும் உடையன. அவற்றை ஈரறிவுயிர்கள் என்பர்.

எறும்பு, கரையான். முதலியன மெய், நா, ஆகியவற்றோடு மணத்தை உணரும் மூக்காகிய பொறியையும் உடையன. இவற்றை மூவறிவுயிர்கள் என்பர்.

நண்டு, தும்பி முதலானவை, மெய், நா, மூக்கு ஆகியவற்றோடு உருவத்தை அறியும் கண்ணாகிய பொறியும் உடையன. இவற்றை நான்கறிவுயிர்கள் என்பர்.

பறவை, விலங்கு முதலானவை, மெய், நா, மூக்கு, கண் ஆகியவற்றோடு ஓசையை உணர்தற்குரிய செவியாகிய பொறியையும் உடையன. இவற்றை ஐயறிவுயிர்கள் என்பர்.

மனிதர்கள், மெய், நா, மூக்கு, கண், செவி ஆகிய ஐம்பொறிகளால் அறிந்தவற்றை ஆராய்தற்குரிய மனமாகிய கருவியையும்

உடையவர்கள். ஆகவே அவர்கள் ஆறறிவுயிர்கள் எனப்படு வார்கள்.

''ஒன்றறிவதுவே உற்றறிவதுவே
இரண்டறிவதுவே அதனொடு நாவே
மூன்றறிவதுவே அவற்றொடு மூக்கே
நான்கறிவதுவே அவற்றொடு கண்ணே
ஐந்தறிவதுவே அவற்றொடு செவியே
ஆறறிவதுவே அவற்றொடு மனனே'
நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே.''
— தொல் காப்பியம்.

---

## பாடம் 14.

## பிணிப்பு வகையால் உயிர்கள் மூன்று திறப்படும்

உயிர்கள், அறிவு, இச்சை, தொழிலாகிய மூன்று தன்மைகளை உடையன. உயிர்களிடத்து அத்தன்மைகளை நிகழவொட்டாமல் ஒரு பொருள் அநாதியே தடுத்து நிற்கிறது. அப்பொருளை மலம் என்பர். அம்மலம் உயிர்களின் தன்மையை ஒரே படித்தாகத் தடுக்கவில்லை. பல்வேறுவகைப்பட வன்மையாகவும் மென்மையாக வும் தடுக்கிறது.

உவமையாகப் புறத்து இருளைச் சொல்லலாம். பார்க்கும் தன்மையுள்ள நம் கண்களைப் புறத்து இருள் இரவில் மறைத்து விடுகிறது. நாம் ஒன்றையும் பார்க்க முடியவில்லை. ஆனால் அதே இருள் பூனை முதலியவற்றின் கண்களை அங்ஙனம் இரவில் மறைப்ப தில்லை. அவைகள் இரவிலேயே இரை தேடித் தின்று வாழுகின் றன. இதுபோலவே மல இருளும் உயிர்களின் அறிதற் சத்தியை வன்மையாகவும் மென்மையாகவும் தடுத்து நிற்கிறது.

உயிர்கள் அறிதற்றொழிலை நிகழ்த்த வொட்டாமல் மலம் தடை செய்வதால் மலத்தை உயிர்களுக்கு ஓர் கட்டு என்பர். கட்டு எனினும் பிணிப்பு எனினும் ஒன்றே.

இம்மல இருளின் தடுத்தற் சக்தியை மாற்ற வல்ல மாயை யாகிய பொருளும் அநாதியே உயிரைப்பற்றியிருக்கிறது மாயை

விளக்குப் போல்வது. அம்மாயையாகிய விளக்கும் மலத்தின் கொடுமையால் திரிபு காட்சிக்கும், ஐயக் காட்சிக்கும் காரணமா கிறது. ஆகையால் மாயையும் ஒரு கட்டென்பர்.

இம்மயக்க உணர்வு காரணமாக உயிர்களிடத்து அவா ஏற் படுகிறது. அதன் காரணமாக உயிர்கள் நல்வினை தீவினைகளைச் செய்கின்றன. அதன் பயனாகப்பிறப்பு இறப்புச் சுழலிற்பட்டு இன்ப துன்பங்களை நுகர்கின்றன, ஆதலால் வினையையும் உயிர்கட்கு ஓர் கட்டென்பர். வினை எனினும் கன்மம் எனினும் ஒன்றே.

சில உயிர்கள் மலம், மாயை, கன்மம் ஆகிய மூன்றாலும் பிணிக்கப்பட்டுள்ளன. மலப்பிணிப்பு வன்மை குறைவாக உள்ள சில உயிர்கள், மலம், கன்மமாகிய இரண்டுகட்டுகள் உடையன வாய் இருக்கின்றன. இன்னும் மலப்பிணிப்பு மிக மென்மையாக உள்ள சில உயிர்கள் அம்மலப்பிணிப்பு ஒன்றையே உடையனவாய் இருக்கின்றன. இங்ஙனம் கட்டுடைய உயிர்கள் முத்திறப்படு கின்றன.

மூன்றாலும் பிணிக்கப்பட்டவர் சகலர் எனப்படுவர். இரண் டால் பிணிக்கப்பட்டவர் பிரளயா கலர் எனப்படுவர். ஒரே பிணிப் புடையவர் விஞ்ஞான கலர் எனப்படுவர்.

---

## பாடம் 15

## உயிர் உடம்பினுள் ஐந்தெழுத்தாய் நின்று உணரும்

பளிங்கு சூரியன் ஒளியில் அவ்வொளி வண்ணமாய் விளங் கும். அதனை அடுத்து ஒரு சிவப்பு நிறப் பொருள் இருந்தால் அந்நிற வண்ணமாய் விளங்கும். அதுபோல உயிரும் தான் பற்றிய பொருள் வண்ணமாய் நின்று அதனை உணரும்.

அங்ஙனம்உயிர் உணருங்கால் உடம்பினுள்ஐந்தெழுத்தாய் நின்று உணரும்.

அவ்வெழுத்து புறத்தில் நாம் வழங்கும் வரிவடிவெழுத்தைப் போல்வது அன்று. ஓவிய எழுத்துப் போல்வது. ஓவியத்தில் ஓர் மரம் எழுதப்பட்டுள்ளது. மரம் எவ்வண்ணமாகக் காணப் படுகிறதோ அவ்வண்ணமாகவே அவ்வோவியம் காணப்படுகின் றது. இந்த எழுத்தையே ஓவிய எழுத்து என்கிறோம். அதனையே

வண்ணஎழுத்து என்றும் சொல்லலாம். ஒளிப் படங்களில் (Cinema) நாம் காணும் உருவங்களெல்லாம் அத்தகைய வண்ண எழுத்துக்களே. புறத்தில் இங்ஙனம் வண்ண எழுத்துக்கள் தோன்றுதல் போல, அகத்திலும் வண்ண எழுத்துக்கள் தோன்றுகின்றன.

புறத்தில் புற ஒளியால் வண்ண எழுத்துக்கள் தோன்றுகின்றன. அகத்தில் அகவொளியால் அவ்வெழுத்துக்கள் உண்டாகின்றன.

ஐம்பொறிகள் வாயிலாக வரும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்று சொல்லப்படும் ஐம்புலனும் அகவொளியில் வண்ண எழுத்துக்களாய் விலங்குகின்றன.

அங்ஙனம் அவ்வண்ண எழுத்துக்கள் மனத்தின் கண் விளங்குவதை மகார எழுத்து என்பர்; அகங்காரதத்துவத்தில்; (ஆங்கார முதலில்) எழுவதை அகார எழுத்து என்பர்; புத்தியின் கண் எழுவதை உகார எழுத்து என்பர். சித்தத்தின் கண் எழுவதை விந்து என்பர். உயிரின் கண் விளங்குவதை நாதம் என்பர்.

**அகவொளியின் வண்ணமே நாதம் எனப்படும். அகார, உகார, மகார, விந்து எழுத்துக்கள் ஏனைய பொருள்களின் வண்ணம்**

இங்ஙனம் ஐந்து இடத்து விளங்கும் ஐவகை எழுத்துக்களாய் நின்று உயிர் ஒன்றை உணரும்.

---

## பாடம் 16.

## மெய்யுணர்தல் ( பகுதி 1 ).

முதல், மெய், உண்மை, தத்துவம் என்பன ஒரு பொருட் சொற்கள்.

''எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப் பொருள் காண்பது அறிவு''

என்பது திருக்குறள்.

''யாதொரு பொருள் யாதோர் இயல்பிற்றுய்த் தோன்றினும், அத்தோன்றிய வாற்றைக் கண்டு ஒழியாது, அப்பொருளின் கண் நின்று மெய்யாகிய பொருளைக் காண்பதே மெய்யுணர்வு'' என்பது பரிமேலழகர் உரை.

நாம் முதலில் காது என்று சொல்லப்படுகிற நம் உடலி லுள்ள உறுப்பு ஓசையை அறிகிறது என்று எண்ணுகிறோம். ஒரு செவிடனிடத்தில் காதாகிய உறுப்பு இருந்தும் அவன் ஓசையை உணராமையைக் காண்கிறோம். அப்போது ஓசையை உணர்வது காதாகிய உறுப்பு அல்ல என்றும், அவ்வுறுப்பினுள்ளே ஓசையை உணரக் கூடிய காதாகிய பொறி ஒன்று உள்ளது என்றும், அப் பொறி கெட்டுப்போய் விட்டமையால் செவிடர் ஓசையை உணர முடியவில்லை என்றும் அறிகிறோம். இங்ஙனம் அறிதலே மெய் யுணர்தலாம்.

இவ்வாறு ஆராய்ந்து நம் ஆன்றோர்கள் கண்ட உண்மை கள் மூப்பத்தாறு உள்ளன.

அவற்றுள் அறிபொறிகள் ஐந்து. அவை மெய், நா, மூக்கு, கண், செவி, என்பன. அவை முறையே தொடுதல் சுவை, நாற்றம் உருவம், ஓசை ஆகியவற்றை அறிதற்குரிய கருவிகள், அவை அவ்வப் பெயருடைய உறுப்புகளில் அமைந்துள்ளன.

செயற் பொறிகள் ஐந்து. அவை, வாய், கை, கால், எருவாய், கருவாய் என்பன. அவற்றின் செயல்கள் பேசுதல் கொடுத்து வாங்குதல், போய்வருதல், மலங்கழித்தல் இன்புறுதல் ஆகியவை. இவைகளும் அவ்வப் பெயருடைய உறுப்புகளில் நின்று தொழில் செய்யும்.

அறிபொறிகட்குப் புலனாகும் பொருள்கள் ஐந்து. அவை ஊறு (தொடுதல்), சுவை, நாற்றம் ஒளி (உருவம்) ஓசை என்பன. இவை பூத குணங்கள் (காரிய தன் மாத்திரைகள்). ஆதலால் இவற்றை உடைய குணிப்பொருள்கள் ஐந்து உள்ளன. அவற்றை ஐம்பூதம் என்பர். அவை முறையே காற்று, நீர், நிலம் தீ வான் (ஆகாயம்) என்பன.

---

## பாடம் 17.

## மெய்யுணர்தல் (பகுதி 2)

ஐம்பூதங்களில், நிலம் ஐந்து குணங்களை உடையது. அவற் றில் அதற்குரிய சிறப்புக் குணம் நாற்றம். நீர், நாற்றம் ஒழிந்த நான்கு குணங்களை உடையது. அவற்றில் அதற்குரிய சிறப்புக் குணம் சுவை தீ, உருவம், ஊறு, ஓசை ஆகிய மூன்று குணங்களை உடையது. அதற்குரிய சிறப்புக் குணம் உருவம். காற்று, ஊறு, ஓசை ஆகிய இரு குணங்களை உடையது ஊறு அதனுடைய சிறப்புக் குணம். வான் ஓசையாகிய ஒரே குணமுடையது.

இவ் வைம்பூதங்களும் ஐந்து தன் மாத்திரைகளினின்றும் தோன்றுவன; தன் மாத்திரைகளுக்கும் பூதங்களுக்கும் உள்ள வேற்றுமை, முளைக்கும் மரத்துக்கும் உள்ள வேற்றுமை போலச் சூக்குமமாய் நிற்றலும், தூலமாய் நிற்றலுமே எனக் கொள்க தன் மாத்திரைகட்கு அவ்வவற்றிற்குரிய சிறப்புக் குணங்களின் பெயரையே வழங்குவர். அவை நாற்றம், சுவை, ஒளி, ஊறு, ஓசை என்பன. (காரணதன் மாத்திரைகள்)

உள்ளத்தில் நான்கு செயல்கள் நிகழ்கின்றன. ஒன்று பொறிவாயிலாக வரும் புலன்களைப் பற்றுதல். இரண்டாவது இப் பற்றிய புலனுருவோடு நினைவு உருவங்களை ஒப்பிட்டு இது யாதாயிருக்கலாம் என்று சிந்தித்தல். மூன்ருவது 'இது இன்னது எனத் தெளியக் காண்பேன்' என்று ஆராய்தற்கு முனைந்து நிற்றல். நான்காவது இது இன்னதுதான் எனத் தெளியக் காண்டல்

இந்நான்கு செயல்களையும் ஒரே கருவி நிகழ்த்தாது. ஆதலால் இவற்றை நிகழ்த்துதற்கு முறையே மனம், சித்தம், அகங்காரம், புத்தி ஆகிய நான்கு கருவிகள் உள்ளன. ஒரு செயலுக்கு அமைந்த கருவி வேறு ஒரு செயலைச் செய்யாது என்பதை மின்சார விசிறி மின்சார விளக்கு முதலியவற்றில் காணலாம். விசிறி விசிறுமே ஒழிய, விளக்காது; விளக்கு விளக்குமே ஒழிய விசிருது.

இத்தத்துவங்கட் கெல்லாம் முதற் காரணமாய் இருப்பது மூலப்பிரகிருதி (மூலப்பகுதி) எனப்படும். அதன் பொருள் முதற் காரணம் என்பது. இம் மூலப்பிரகிருதி, மூலப்பகுதி என்றும் சொல்லப்படும்.

---

## பாடம் 18.

## மெய்யுணர்தல் (பகுதி 3).

மூலப் பகுதி மூன்று குணங்களின் தொகுதி. அதிலிருந்து பண்பு முதல் (குணதத்துவம்) தோன்றும். அதன் உட்பிரிவு செம்மைப் பண்பு (சாத்வீகம்) விரைவுப் பண்பு (ராசதம்) மயக்கப் பண்பு (தாமதம்) என்பன. முப்பண்புகளும் பிரிந்து தோன்ருமல் கலந்து நுட்பமாய் நிற்கும் நிலையில் மூலப்பகுதி என்றும், பிரிந்து விளங்கித் தோன்றும் நிலையில் பண்புமுதல் (குணதத்துவம்) என்றும் பெயர் பெறும் இந்த மூலப் பகுதியை உயிர் சாரும் பொழுது, உயிரினிடத்து அவிச்சை, அகங்காரம் அவா, ஆசை வெகுளி ஆகிய ஐந்து குற்றங்கள் விளங்குகின்றன.

இவற்றைக் காமம், வெகுளி, மயக்கம் என மூன்று குற்றங் களாகவும், கூறுவர். மலத்தால் தடைப்பட்டிருக்கிற உயிரின் செயல், அறிவு, இச்சைகளை முறையே விளக்குவதற்குக் கலை, புலம் (வித்தை) அவா (அராகம்), ஆகிய மூன்று தத்துவங்கள் உயிரைப் பொருந்தி நிற்கும். அவரவர் செய்த வினைப்பயன்களை அவரவரே நுகருமாறு கூட்டுவதற்கு ஒரு ஊழ் முதலும் (நியதிதத்துவமும்) வினைப்பயனை நுகர்தற்குரிய காலத்தை வரையறை செய்வதற்கு ஒருகாலமுதலும் (கால தத்துவமும்)உயிரைப் பொருந்தியிருக்கும்.

இவ்வைந்தும் உயிருக்கு ஒருசட்டைபோல அமைந்திருக்கும். இவ் வைந்தோடுங் கூடிய உயிர் தன் தொழிலைச் செய்வதற்குத் தகுதியுடையதாக நிற்கும். அப்பொழுது உயிரை ஆள் முதல் (புருட தத்துவம்) என்பர். இத்தத்துவங்கள் அனைத்தும் தூய் தல்லா மாயை (அசுத்தமாயை) யின் காரியங்கள்.

தூய மாயையில் (சுத்தமாயையில்) இறைவனுடைய சத்தி நின்று தொழில் செய்கிறது. அச்சத்தியினுடைய நிலை வேறுபாட் டிற்கேற்ப ஐந்து தத்துவங்கள் ஏற்படுகின்றன. சத்தி ஞானமே யாய்த் தூயமாயையில் (சுத்தமாயையில்)நின்று தொழில் செய்யும் போது அறிவு முதல் (சிவதத்துவம்) என்று சொல்லப்படும் கிரியையேயாய் நிற்கும்போது செயல் முதல் (சத்தி தத்துவம்) என்று சொல்லப்படும். ஞானமும் கிரியையும் சமமாகக் கூடி நிற்கும்போது ஓங்கார முதல் (சதா சிவதத்துவம்) என்று சொல் லப்படும். கிரியை ஏறி ஞானங் குறைந்து கூடிய நிலையில் பேருரு முதல் (மகேஸ்வரதத்துவம்) எனப்படும். கிரியை குறைந்து ஞானங் ஏறிக் கூடிய நிலையில் தூய புலமுதல் (சுத்த வித்தியாதத் துவம்)என்று சொல்லப்படும். இங்ஙனம் தூயமாயை(சுத்தமாயை) தன்னில் விரவி நிற்கும் சத்தியின் நிலை வேறுபாட்டால் ஐந்து தத்துவங்களும் விளங்கும்.

## தமிழ் மண்டிலங்கள் (தத்துவங்கள்) முப்பத்தாருவன.

## தூயமாயாதத்துவங்கள் (சுத்த மாயா தத்துவங்கள்) ஐந்து, அவை:—

(பிரேரகாண்டம்)
இயக்குப்பாகம்
சிவதத்துவம்

1. அறிவு முதல் (சிவ தத்துவம்)
2. செயல் முதல் (சத்தி தத்துவம்)
3. ஓங்கார முதல் (சதாசிவ தத்துவம்)
4. பேருரு முதல் (மகேஸ்வர தத்துவம்)
5. தூய புல முதல் (சுத்த வித்தியா தத்துவம்)

## தூய தல்லா மாயா தத்துவங்கள்
## (அசுத்த மாயா தத்துவங்கள்)
## முப்பத்தொன்று. அவை:

1. கால முதல் (காலதத்துவம்)
2. ஊழ் முதல் (நியதிதத்துவம்)
3. கலை முதல் (கலாதத்துவம்)
4. புல முதல் (வித்தியாதத்துவம்)
5. அவா முதல் (அராக தத்துவம்)
6. ஆள்முதல் (புருடதத்துவம்)
7. மாயை முதல்

(போக சத்திரு காண்டம்) நுகர்ச்சி மூலப்பாகம் வித்தியாதத்துவம்

மாயை, காலம், ஊழ், கலை, புலம், அவா ஆகிய ஆறு முதல்களும் நுகர்ச்சி மூலப்பாகம் என்ப.

8. பண்பு முதல் (குணதத்துவம்)
9. தெளியும் முதல் (புத்திதத்துவம்)
10. ஊக்கும் முதல் (அகங்காரதத்துவம்)
11. உன்னும் முதல் (மனமும் சித்தமும்)

அகக்கருவி கள் 4

12. மெய் முதல்
13. நாக்கு முதல்
14. மூக்கு முதல்
15. கண் முதல்
16. காது முதல்

அறிவுப் பொறிகள் 5

17. வாய் முதல்
18. கை முதல்
19. கால் முதல்
20. எருவாய் முதல்
21. கருவாய் முதல்

செயற்பொறி கள் 5

22. ஓசை முதல்
23. ஊறு முதல்
24. ஒளி முதல்
25. சுவை முதல்
26. நாற்ற முதல்

தன்மாத் திரைகள் 5

27. வான் முதல்
28. காற்று முதல்
29. தீ முதல்
30. நீர் முதல்
31. நில முதல்

பூதங்கள் 5

(போக்கிய காண்டம்) ஆன்ம தத்துவம்

ஆக நம் தமிழ் ஆன்ரேர்கள் கண்ட தத்துவங்கள் முப்பத்தாரும். இவையும் இவற்ருலாகிய உலகங்களும் கருவிகளும் படைப்பின் பகுதிகளில் அடங்கும்.

---

## பாடம் 19.

### அக ஒளியின் ஐந்து கலைகள், அகங்காரம், புத்தி, மனம், சித்தம், புருடன் ஆகிய ஐந்தையும் உடன் நின்று செலுத்தும்.

நாம் தூய காற்றை உட்கொள்ளுகிரும். அது நாம் மூச்சு விடும்பொழுது கரிக் காற்ருக வெளியே வருகிறது. மரஞ்செடி கொடிகளின் இலைப்பச்சை அக்கரிக்காற்றிலுள்ள கரியை எடுத்துக் கொண்டு தூய காற்றை வெளி விடுகிறது. இச் செயல் இலையின் மேல் சூரிய ஒளி படுங்காலத்திலேயே நிகழுகிறது. ஆகவே இலைப் பச்சை தன் தொழிலைச் செய்யுமாறு சூரிய ஒளி உடன் நின்று செலுத்துகிறது என்று அறிகிரும். அதுபோல அக ஒளியும் ஐந்து கலைகளாகப் பிரிந்து அகங்காரம், புத்தி, மனம், சித்தம், புருடன் ஆகியவற்றை உடன் நின்று செலுத்துகிறது. அக்கலைகளை முறையே அகாரகலை, உகாரகலை,, மகாரகலை, விந்துகலை, நாதகலை என வழங்குவர். புறத்தில் சூரிய ஒளி, மரம் செடி கொடிகள் தம் தொழிலைச் செய்யுமாறு உடன் நின்று செலுத்துதலும், வண்ண எழுத்துக்களாகப் பிரிந்து கண்ணுக்குக் காட்சியளித்தலும் ~~ஆகிய~~ போல அக ஒளியும் ஐந்து கலைகளாகப் பிரிந்து, அகங்காரம் முதலியவற்றைச் செலுத்துதலும், வண்ண எழுத்துக்களாகப் பிரிந்து உயிருக்கு உணர்வைத் தருதலும் ஆகிய இரண்டு தொழில்களைச் செய்கிறது.

முதல்வனது சக்தியும் ஐந்து கலைகளாகப் பிரிந்து அக ஒளியின் ஐந்து கலைகளையும் உடன் நின்று செலுத்துகிறது. அச்சத்திகள் முறையே அயன், மால், உருத்திரன், மகேஸ்வரன், சதாசிவன் எனப்பெயர் பெறும். கலை, பகுதி, பிரிவு, பாகம், என்பன ஒரு பொருட் சொற்கள்.

இங்ஙனம் அக ஒளி உயிர்கட்குப் பொருளின் தன்மைகளை இயம்புதலால் அது அகத்தியம் எனவும் வழங்கப் பெறும். அகத்து—உள்ளே. இயம்—இயம்புதல். அகத்தியம்—(Innervoice) அக ஒளி. அதனைச் செலுத்தும் முதல்வனது சத்தி (அகத்திய ஈஸ்வரன்) அகத்தீசுவரன் என வழங்கப்பெறும்.

இவ்வக ஒளியைச் சூக்கும வாக்கு என்றும், நாதம் என்றும் கூறுவர். அறிவு நூல்களெல்லாம் முதலில் இவ்வக ஒளியினில் வண்ண எழுத்துக்களாகப் பிரிந்து தோன்றுகின்றன. ஆதலின் இவ்வக ஒளியை மறை முதல் என்றும், எழுதா மறை என்றும் ஆன்றோர் கூறுவர்.

---

## பாடம் 20.

## அக ஒளியின் ஐந்து கலைகளைச் செலுத்தும் முதல்வனது சத்தியே "பிள்ளையார்" என வழங்கப் பெறும்.

எல்லா அறிவு நூல்களும் அக ஒளியினின்றும் தோன்றுதலால், அது எல்லா அறிவு நூல்களின் ஒரு தொகுதியாகும். ஆகவே புறத்தில் அதனைக் குறிப்பதற்குச் சொற்களின் தொகுதியாகிய "ஓ" என்ற ஒலி அமைத்தனர். "ஓ" என்ற ஒலிசொற்களின் தொகுதியாமாற்றைச் சந்தையிற் கேட்கும் ஒலியால் அறியலாம். சந்தையிற் கூடியுள்ள பலரும் பொருள் உணர்த்தும் பல சொற்களையே பேசுகின்றனர். அச்சொற்களின் தொகுதி சந்தையினின்றும் சிறிது தொலைவிலுள்ள ஒருவனுக்கு "ஓ" என்ற ஒலியாகவே கேட்கப்படும். இவ்வாறு முதல்வனுடைய சத்தி ஐந்து கலைகளாகப் பிரிந்து அகாரகலை முதலிய ஐந்து சுத்த மாயா கலைகளைச் செலுத்தி அதன் வழித்தாய் மனம் முதலிய ஐந்து தத்துவங்களையும் செலுத்தி உயிருக்கு உணர்வு உண்டாக்குகிறது.

இந்நிலையில் முதல்வனது சத்தி "பிள்ளையார்" என்று சொல்லப்படும். அப்பிள்ளையாரைக் குறிப்பதற்குப் புறத்தில் "ஓ" என்ற ஒலி வடிவத்தையே அமைத்தனர். அவ்வொலி "ஓம்" எனவும் ஒலிக்கப்படும். அதனைப் பிரணவம் எனவும் வழங்குவர். ஒலி வடிவில் ஓ காரத்தை அமைத்தது போலப் பொருள் வடிவில் ஆனை முகமும் ஐந்து கைகளும் உடைய ஒரு உருவத்தைக் குறியாக அமைத்தனர். அவ்வுருவில் பாசம் தாங்கிய கை, மனதைச் செலுத்தும் இறைவனுடைய சத்தியை (அரனை)க் குறிக்கும். அங்குசம் தாங்கிய கை, அகங்கார தத்துவத்தைச் செலுத்தி நிற்கும் முதல்வனுடைய சத்தியை (அயனை)க் குறிக்கும். ஒடிந்த கொம்பு ஏந்திய கை, சித்தத்தைச் செலுத்தி நிற்கும் முதல்வனது சத்தியை (மகேசுரனை) உணர்த்தும். உணவு (மோதகம்) ஏந்திய கை, புத்தி தத்து

வத்தைச் செலுத்தி நிற்கும் முதல்வனது சத்தியை (அரியை) குறிக்கும். முகத்திலிருந்து தொங்குகின்ற தும்பிக்கை, உயிர்க்கு உணர்வை நல்கும் புருட தத்துவத்தைச் செலுத்தி நிற்கும் முதல்வனது சத்தியை (சதாசிவத்தை)க் குறிக்கும்.

இங்ஙனம் அக ஒளியைச் செலுத்தி உயிர்கட்கு வினைப் பயனை ஊட்டுகிற முதல்வனுடைய சத்தியே உயிர்கட்குத் தலைவி; அச்சத்தியை உடையவனே உயிர்கட்குத் தலைவன், என்ற உண்மையை ஆனை முகம் குறிக்கிறது. ஆன்-உயிர்: ஐ-தலைவன். ஆனை-உயிர்களுக்குத் தலைவன் (பசுபதி).

அக ஒளி — ஓம்— (அது சடப் பொருள்—சுத்தமாயை) அக ஒளி ஐந்து கலைகளாகப் பிரிகின்றது. அக்கலைகளின் பெயர் 1.அகாரகலை 2.உகாரகலை 3.மகாரகலை 4.விந்துகலை 5. நாதகலை

அ உ ம விந்து நாதம்

---

பிள்ளையார் உயிர்கட்குத் தலைவன். சத்தி வண்ணமாயிருப்பார் — அதாவது சித்து வண்ணம். சுத்த மாயா கலைகளைத் தொழிற்படுத்துவார்.

| பிள்ளையாரின் திருவுருவம் | அங்குசம் தாங்கிய கை | உணவு ஏந்திய கை | பாசம் தாங்கிய கை | ஒடிந்த கொம்பு ஏந்திய கை | தும்பிக்கை |
|---|---|---|---|---|---|
| இறைவனது ஆற்றல் | அயன் | அரி | அரன் | மகேசுரர் | சதாசிவம் |
| சுத்தமாயா கலைகள் | அ | உ | ம | விந்து | நாதம் |
| சுத்தமாயா கலைகளால் தொழிற்படும் அசுத்த மாயா தத்துவங்கள் | ஆங்காரம் | புத்தி | மனம் | சித்தம் | உயிர் (புருடன்) |
| உயிருக்கு உணர்வாய் வரும் சுத்த மாயா வண்ண எழுத்துக்கள் | அ | உ | ம | விந்து | நாதம் |

இவ்வக ஒளியைச் சூக்கும வாக்கு என்றும், நாதம் என்றும் கூறுவர். அறிவு நூல்களெல்லாம் முதலில் இவ்வக ஒளியினில் வண்ண எழுத்துக்களாகப் பிரிந்து தோன்றுகின்றன. ஆதலின் இவ்வக ஒளியை மறை முதல் என்றும், எழுதா மறை என்றும் ஆன்றோர் கூறுவர்.

---

## பாடம் 20.

## அக ஒளியின் ஐந்து கலைகளைச் செலுத்தும் முதல்வனது சத்தியே "பிள்ளையார்" என வழங்கப் பெறும்.

எல்லா அறிவு நூல்களும் அக ஒளியினின்றும் தோன்றுதலால், அது எல்லா அறிவு நூல்களின் ஒரு தொகுதியாகும். ஆகவே புறத்தில் அதனைக் குறிப்பதற்குச் சொற்களின் தொகுதியாகிய ''ஓ'' என்ற ஒலி அமைத்தனர். ''ஓ'' என்ற ஒலிசொற்களின் தொகுதியாமாற்றைச் சந்தையிற் கேட்கும் ஒலியால் அறியலாம். சந்தையிற் கூடியுள்ள பலரும் பொருள் உணர்த்தும் பல சொற்களையே பேசுகின்றனர். அச்சொற்களின் தொகுதி சந்தையினின்றும் சிறிது தொலைவிலுள்ள ஒருவனுக்கு ''ஓ'' என்ற ஒலியாகவே கேட்கப்படும். இவ்வாறு முதல்வனுடைய சத்தி ஐந்து கலைகளாகப் பிரிந்து அகாரகலை முதலிய ஐந்து சுத்த மாயா கலைகளைச் செலுத்தி அதன் வழித்தாய் மனம் முதலிய ஐந்து தத்துவங்களையும் செலுத்தி உயிருக்கு உணர்வு உண்டாக்குகிறது.

இந்நிலையில் முதல்வனது சத்தி ''பிள்ளையார்'' என்று சொல்லப்படும். அப்பிள்ளையாரைக் குறிப்பதற்குப் புறத்தில் ''ஓ'' என்ற ஒலி வடிவத்தையே அமைத்தனர். அவ்வொலி ''ஓம்'' எனவும் ஒலிக்கப்படும். அதனைப் பிரணவம் எனவும் வழங்குவர். ஒலி வடிவில் ஓ காரத்தை அமைத்தது போலப் பொருள் வடிவில் ஆனை முகமும் ஐந்து கைகளும் உடைய ஒரு உருவத்தைக் குறியாக அமைத்தனர். அவ்வுருவில் பாசம் தாங்கிய கை, மனதைச் செலுத்தும் இறைவனுடைய சத்தியை (அரனை)க் குறிக்கும். அங்குசம் தாங்கிய கை, அகங்கார தத்துவத்தைச் செலுத்தி நிற்கும் முதல்வனுடைய சத்தியை (அயனை)க் குறிக்கும். ஒடிந்த கொம்பு ஏந்திய கை, சித்தத்தைச் செலுத்தி நிற்கும் முதல்வனது சத்தியை (மகேசுரனை) உணர்த்தும். உணவு (மோதகம்) ஏந்திய கை, புத்தி தத்து

வத்தைச் செலுத்தி நிற்கும் முதல்வனது சத்தியை (அரியை) குறிக்கும். முகத்திலிருந்து தொங்குகின்ற தும்பிக்கை, உயிர்க்கு உணர்வை நல்கும் புருட தத்துவத்தைச் செலுத்தி நிற்கும் முதல்வனது சத்தியை (சதாசிவத்தை)க் குறிக்கும்.

இங்ஙனம் அக ஒளியைச் செலுத்தி உயிர்கட்கு வினைப் பயனை ஊட்டுகிற முதல்வனுடைய சத்தியே உயிர்கட்குத் தலைவி; அச்சத்தியை உடையவனே உயிர்கட்குத் தலைவன், என்ற உண்மையை ஆனை முகம் குறிக்கிறது. ஆன்-உயிர்: ஐ-தலைவன். ஆனை-உயிர்களுக்குத் தலைவன் (பசுபதி).

அக ஒளி — ஓம்— (அது சடப் பொருள்—சுத்தமாயை)
அக ஒளி ஐந்து கலைகளாகப் பிரிகின்றது. அக்கலைகளின் பெயர்
1. அகாரகலை 2. உகாரகலை 3. மகாரகலை 4. விந்துகலை 5. நாதகலை
அ உ ம விந்து நாதம்

பிள்ளையார் உயிர்கட்குத் தலைவன். சத்தி வண்ணமாயிருப்பார் — அதாவது சித்து வண்ணம். சுத்த மாயா கலைகளைத் தொழிற்படுத்துவார்.

| பிள்ளையாரின் திருவுருவம் | அங்குசம் தாங்கிய கை | உணவு ஏந்திய கை | பாசம் தாங்கிய கை | ஒடிந்த கொம்பு ஏந்திய கை | தும்பிக்கை |
|---|---|---|---|---|---|
| இறைவனது ஆற்றல் | அயன் | அரி | அரன் | மகேசுரர் | சதாசிவம் |
| சுத்தமாயா கலைகள் | அ | உ | ம | விந்து | நாதம் |
| சுத்தமாயா கலைகளால் தொழிற்படும் அசுத்த மாயா தத்துவங்கள் | ஆங்காரம் | புத்தி | மனம் | சித்தம் | உயிர் (புருடன்) |
| உயிருக்கு உணர்வாய் வரும் சுத்த மாயா வண்ண எழுத்துக்கள் | அ | உ | ம | விந்து | நாதம் |

## பாடம் 21.

# உயிரின் மூன்று நிலையும், (காரண அவத்தைகள்) ஐந்து நிலையும் (காரிய அவத்தைகள்)

### உயிர்களுக்கு மூன்று நிலைகள் உள. (காரண அவத்தைகள்)

முதல் நிலை, ஆணவ மலத்தோடு கூடியிருக்கும் நிலை. அந் நிலையில் உயிர் ஒன்றையும் அறியாது. அவ்வறியாமை நிலையை உயிரின் கேவல நிலை என்பர்.

இரண்டாம் நிலை, மாயையினின்றும் தோன்றிய தத்துவங்களோடு கூடியிருக்கும் நிலை. அந் நிலையில் உயிர்கட்குச் சுட்டறிவு நிகழும். சுட்டறிவாவது, ''இது குடம்,'' ''இது மரம்'' என்று பொருள்களை ஒன்றொன்றாகச் சுட்டி அறிதல். அங்ஙனம் சுட்டி அறியும் நிலையைச் சகல நிலை என்பர்.

மூன்றும் நிலை, உயிர் அருளோடு கூடிச் சுட்டிறந்து அறியும் நிலை. அந்நிலை மலம், மாயை, கன்மங்களின் நீங்கிய உயிரின் தூய நிலை. அந்நிலையைச் சுத்த நிலை என்றும் சொல்லுவர். (சுட்டிறந்து அறிதல்—உலகப் பொருட்களை ஒவ்வொன்றாகத் தனித்தனியாக அறியாமல் எங்கும் செறிந்து நீக்கமின்றி நிறைந்திருக்கும் பரம் பொருள் ஒன்றையே அறிதல்) வட மொழியாளர் இம்மூன்று நிலைகளையும் மூன்று அவத்தைகள் என்பர்).

தத்துவங்களோடு கூடிய சகல நிலையில், தத்துவங்கள் கூடுதலாலும், நீங்குதலாலும் ஐந்து நிலைகளை (காரிய அவத்தைகளை) உயிர்கள் அடைகின்றன.

அறிவுப் பொறி, செயற்பொறிகளோடு கூடி அறிதலும்செய்தலும் நிகழுகிற நிலையை நனவு நிலை என்பர். அப்பொறிகளின் நீங்கி மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய நான்கோடும், அறிவும் செயலும் நிகழ்த்தும் உயிரின் நிலையைக் கனவு நிலை என்பர். மனம், புத்தி, அகங்காரங்களின் நீங்கிச் சித்தத்தோடு ஒன்றியிருந்து உணரும் நிலையை உறக்க நிலை என்பர். அச்சித்தத்தையும் விட்டு நீங்கி மூச்சு விடுதல் மட்டும் நிகழ்த்திக் கொண்டிருக்கும் நிலையைப் பேருறக்க நிலை என்பர். மூச்சுவிடுதலும் நிகழாமல் உயிர் அடங்கிக் கிடக்கும் நிலையை உயிர்ப்படங்கிய நிலை என்பர். இந்த நிலை கேவல நிலையை ஒத்திருப்பதால் சகல கேவலம் என்பர். இவ்வைந்து நிலைகளையும் வடமொழியாளர் முறையே

சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம், என வழங்குவர். சகல நிலையில் நாம் ஒன்றை உணரும்போது, இடைவிடாமல் அதனை உணருவதுபோலத் தோன்றினும் இடைவிட்டு விட்டே உணருகிறோம். அதாவது மறத்தலும் நினைத்தலும் அப்பொருளின் கண்ணே விரைவாக மாறிமாறி நிகழுகிறது. கொள்ளிக்கட்டையைச் சுழற்றும்பொழுது விரைவு மிகுதியால் ஒரு கொள்ளிவட்டம் தோன்றுவதுபோல, விரைவு மிகுதியினாலேயே நாம் இடைவிடாமல் நினைப்பதாக எண்ணுகிறோம்.

---

## பாடம் 22

### உயிர் முதல்வன் அருளால் உணருகிறது

வானத்தில் இரவில் பல சிறு சிறு ஒளிப்பொருள்களைக் காணுகிறோம். அவற்றின் வெண்மை நிறம்பற்றி அவற்றைவெள்ளிகள் என்பர் சிலர். அவை இருண்ட வானத்தில் மினுங்குதல்பற்றி அவற்றை விண்மீன்கள் என்று வழங்குவர்; அம்மீன்களிற் சில இயற்கை ஒளியுடையன. செயற்கை ஒளி உடையவை செவ்வாய், புதன், வியாழன், முதலிய பெயர்களால் வழங்கப்படுகின்றன. அவை சூரியனுடைய ஒளியால் விளங்குகின்றன; அங்ஙனம் விளங்கும்பொழுது அம்மீன்கள் சூரிய ஒளியாகிவிடவில்லை. சூரிய ஒளியின் நீங்கி வேறாகவும் விளங்கவில்லை சூரிய ஒளியுடன் நின்று விளங்குகின்றன.

முதல்வன் சூரியன்போன்று இயற்கை உணர்வுடையவன். உயிர்கள் செவ்வாய், புதன், வியாழன், போன்று செயற்கைஉணர்வுடையன. அவ்விண்மீன்கள் சூரிய ஒளியுடன் கூடிநின்று விளங்குதல்போல உயிர்கள் முதல்வன் அருளுடன் கூடிநின்று உணருகின்றன. அங்ஙனம் உணருங்கால் உயிர்கள் அவ்வருளே ஆகிவிடுவதும் இல்லை. அவற்றின் நீங்கி வேறாய் நிற்பதும் இல்லை. அருளோடு உடனாய் நின்று உணர்கின்றன. அருள் என்பது முதல்வனுடைய சத்தியே. அச்சத்தி உயிர்களின் மலச்சத்தி வேறுபாட்டிற்கு ஏற்பப் பலவேறு வகைப்பட உணர்த்தும். சூரியனுடைய ஒளி பலவேறு தொழில்களைச் செய்யினும் சூரியன் வேறுபாடின்றி விளங்குதல்போல, முதல்வனுடைய சத்தி பலவேறு வகைப்பட உயிர்கட்கு உணர்த்தினும், முதல்வன் யாதொரு வேறுபாடுமின்றி நிற்பன்.

சகல நிலையில் முதல்வன் சத்தி, உயிர்கட்குச் சுட்டறிவை நிகழ்த்தும். அப்பொழுது அதுதன்னையும்உணர்த்தாது தலைவனையும் உணர்த்தாது, ஆதலால் அதனை மறைத்தற் சத்தி என்பர்.

---

## பாடம் 23.

## பொருள்களின் இரண்டு இயல்புகள்

ஒவ்வொரு பொருளிலும் இரண்டு இயல்புகள் காணப்படும், ஒன்று நிலைத்துள்ள இயல்பு, மற்றொன்று நிலைத்திராத இயல்பு.

சிலர் மூன்றும் பிறையைக் காணவிரும்பினர். மாலை வேளையில், மேற்குத் திக்கில் வானத்தில் தேடினர். ஒருவன் அதை முதலிற் கண்டான் காணாதவனுக்குக் காட்டத்தொடங்கி ஒரு மரத்தின் உச்சிக் கிளைக்கு நேர்மேல் ஒருமுழ உயரத்தில் மூன்றும் பிறை இருக்கிறது என்றான். காணாதவனும் அவ்வாறே பார்த்து அதனை அறிந்தான். அங்ஙனம் பார்த்து அறிந்துகொண்டவன் வேறொரு நாள் மூன்றும் பிறை பார்க்கச் சென்றான். முந்தினநாள் கண்டவாறே பார்த்தறிய முயன்றான். அன்றைக்கு அந்த மரத்தின் உச்சிக்கிளைக்கு நேர்மேல் ஒரு முழ தூரத்தில் பிறை காணப்படவில்லை. வேறு ஒரு இடத்தில் பிறை காணப்பட்டது

முதல் நாள் மரத்தின் உச்சிக் கிளைக்கு நேர்மேல் ஒரு முழ தூரத்தில் பிறை இருந்தமை அதனுடைய நிலைத்திராத இயல்பு மெல்லிய கோடுபோல் வெள்ளிய ஒளி உடையதாய் வில்போல் வளைந்து அரைவட்ட வடிவினதாய் விளங்குவது மூன்றும் பிறையின் நிலைத்துள்ள இயல்பு.

நிலைத்துள்ள இயல்பு தன்னியல்பு என்றும், உண்மை இயல்பு என்றும் வழங்கப்பெறும். நிலைத்திராத இயல்பு, பொது இயல்பு என்று வழங்கப் பெறும். வடமொழியாளர் நிலைத்திருக்கும் தன்னியல்பைச் சொரூப இலக்கணம் என்பர். நிலைத்திராத பொது இயல்பைத் தடத்த இலக்கணம் என்பர். ஒரு பொருளுக்கு வேறு ஒரு பொருளோடு உள்ள இயைபால் உண்டாவது நிலைத்திராத பொது இயல்பு. வேறு ஒரு பொருளோடு இயைபின்றி ஒரு பொருளினிடத்து விளங்குவது நிலைத்துள்ள தன்னியல்பு. நில்லாத இயல்புகளை நிலைத்த இயல்புகளாகக் காணுதல் புல்லறிவாகும். ஆனதுபற்றியே திருவள்ளுவ நாயனார்.

''நில்லாதவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை''

என்று அருளிச் செய்தனர்.

---

# பாடம் 24.

## முதல்வன் சுட்டுணர்வுக்குப் புலனாகாதவன்.

நாம் பொருள்களை 'இது குடம்' 'இது வீடு' என்று இவ்வாறு ஒவ்வொன்றாகச் சுட்டி உணருகிறோம். அங்ஙனம் சுட்டுணர்வுக்குப் புலனாகிய பொருள்கள் எல்லாம் தோன்றி நின்று மறையும் தன்மையுடையன. தோன்றி நிலைபெறுகிற காலத்து அது பருப்பொருளாக நம் அறிவிற்கு விளங்குகிறது. மறைந்து போன காலத்து நுண்பொருளாக மாறி நம் அறிவிற்கு விளக்கமின்றி இருக்கிறது. தோன்றிய பருப்பொருள் இத்துணைப் பொழுது நிற்கும் என நம்மால் அறிய வாராது. நிலைபெறுவதுபோதுத் தோன்றி விரையக் கெட்டு மறைந்து போகிறது. ஆனதுபற்றி அத்தகைய பொருள்களை அழிபொருள் என்றும் அசத்து என்றும் ஆன்றோர் வழங்குவர். சத்து என்பது என்றும் ஒரு தன்மைத் தாய் இருப்பது. அசத்தாவது வேறுபடும் தன்மைத்தாய் இருப்பது. முதல்வன் என்றும் ஒரு தன்மையனாய் விளங்குபவன். ஆதலால் அவனை ஆன்றோர் சத்து என்று கூறுவர். முதல்வன் சுட்டுணர்வுக்குப் புலனாகும் இயல்பை உடையவன் என்னின், சுட்டுணர்வுக்குப் புலனாகும் உலகப் பொருள்கள் போல அழி பொருள் ஆகிய அசத்தாவன். ஆதலால் ஆன்றோர், முதல்வன் சுட்டுணர்வுக்கு எட்டாதவன் என்று துணிந்தனர்.

---

# பாடம் 25.

## முதல்வன், அவன் அருளால் உயிர் உணர்விற்குப் புலனாவன்

ஒருவாற்றானும் அறியப்படமாட்டாத பொருள் இல்பொருளாகும், ஆமை மயிர், ஆகாயத்தாமரை முதலியனபோல் அவ்வில் பொருள்களால் நாம் ஒரு பயனையும் அடைதல் முடியாது. ஆமை மயிரால் கம்பளம் செய்யமுடியாது. ஆகாயத் தாமரையில் மாலைகட்ட முடியாது. முதல்வன் ஐந்தொழில் இயற்றுகிறான் என்ற உண்மையை ஆன்றோர் கண்டனர். ஆகவே முதல்வன் இல்பொருள் ஆகான் என்று துணிந்தனர். அங்ஙனம் துணிந்து முதல்வனைக் காண அவாவினர். அவன் அருளால் அவனைத் தங்கள் அறிவிற் கண்டனர். காணுங்கால் சுட்டிறந்து அருளோடு ஒன்றி நின்றனர்.

அம்முதற்பொருள் அவர்கட்கு இன்ப வடிவினனாய் விளங்கினான். ஆகவே அவனைச் சிவன் என்றும் சத்தென்றும், இரண்டு வகையாக வழங்கினர் சிவம் என்பதன் பொருள், இன்பம் என்பதாம். சத்தென்பதன் பொருள், என்றும் ஒரு தன்மைத்தாய் விளங்குபவன் என்பதாம்.

---

## பாடம் 26

### சத்தாகிய சிவத்திற்கு சுட்டுணர்வு இல்லை

சுட்டறிவாவது, ஒரு பொருளுக்கு வேறாய் அதன் எதிர் நின்று அதனை அறிவது. ''இடது குடம்'' என்று உயிர் உணரும்பொழுது, உயிர், கண் இந்திரியத்தோடு விரவி, அதுவாய் நின்று, அவ்விந்திரியத்திற்கு வேறான குடத்தை உணருகிறது. ஆகவே சுட்டுணர்வு நிகழும் பொழுது. உணரப்படும் பொருளுக்கு வேறாய் உணர்கின்ற உயிர் நிற்கிறது.

சத்தாகிய சிவம் எல்லாப் பொருள்களோடும் விரவி வேறின்றி நிற்பதால், அவனுக்குச் சுட்டுணர்வு நிகழாது. மேலும் உயிர் ஒன்றைச் சுட்டி உணரும்பொழுது, அதன் அறிவு அதில் அழுந்தி வேறு ஒன்றையும் அறிவதில்லை. சிவம் எல்லாவற்றையும் ஒருங்கே அறிந்து நிற்பவன். ஆதலால் ஒன்றில் அழுந்தி அதனை மட்டும் அறிந்து மற்றவற்றை அறியாமல் இருக்கிற சுட்டுணர்வு உடையவன் ஆகான். சுட்டுணர்வாவது ஒரு சிறு பகுதியை மட்டும் அறிகிற சிற்றறிவு. முற்றுணர்வாவது எல்லாவற்றையும் ஒருங்கே அறிவது. ஆகவே சுட்டுணர்வாகிய சிற்றறிவில்லாமை முற்றுணர்வுடைய சிவத்திற்கு மேம்பாடே ஆகும். குறைபாடாகாது. ஒரு பொருளும் முதல்வனுக்கு அன்னியமாய் அவனெதிர் முனைத்து நில்லாமையால், அவன் ஒரு பொருளையும் சுட்டி உணரான். எல்லாப் பொருள்களையும் சுட்டுணர்வின்றி நின்றவாறே அறிவான்.

சுட்டுணர்வுக்குப் புலனாகும் பொருள்கள் அழிபொருள்களாகிய அசத்தென்றும், ஆதலால் முதல்வன் சுட்டுணர்வுக்குப் புலனாகாதவன் என்றும், ஒரு வாற்றானும் அறியப்படாத பொருள் இல்பொருள் என்றும் ஆதலான் அவனருளால் அவனை அறிதல் கூடுமென்றும். இவ்வாறு ஒவ்வொன்றாய்ச் சுட்டி ஆராய்ச்சி செய்து உயிர்களாகிய நாம் அறிகிறோம். சத்தாகிய சிவம் இங்ங

ணம் சுட்டி ஆராய்ச்சி செய்யாது. சுட்டி ஆராய்ச்சி செய்த பொருள் சத்தாகிய சிவத்திற்கு வேறு என்று ஆன்ருேர் துணிந்தனர்.

சிவாத்துவித சைவர், சத்தாகிய சிவமே, ஆன்மாவினிடமாக நின்று, சுட்டி உணரும் என்பர். அது பொருந்தாமையை மேற்கூறியவாற்ருன் அறிக.

## பாடம் 27.

### அசத்தாகிய தத்துவங்களுக்கு உணர்வில்லை.

நாம் ஒரு பொருளை இது இன்னது என்று சுட்டி உணர்வதற்கு நமக்குத் துணை செய்வது மனம் முதலிய தத்துவங்கள் இத்தத்துவங்களெல்லாம் மாலயயினின்றும் தோன்றியவை. ஆதலால் அவை நிலைத்த இயல்புடையன அல்ல. தோன்றி நின்று அழியும் தன்மையன. அவற்றை அசத்து என வழங்குவர்.

உயிர் ஒன்றனைச் சுட்டி அறியும் பொழுது அத்தத்துவங்களோடு உடனுய் விரவி நின்று அறியும். ஆனது பற்றிச் சிலர் அத்தத்துவங்களே அறிகின்றன என்று சொல்வார்கள். உண்மையில் நோக்குவார்க்குத் தத்துவங்கள் விளக்குப் போல உயிர் காண்பதற்குத் துணை செய்வன, என்பது புலனுகும். வேனிற் காலத்துத் தோன்றும் கானல் அறிவில்லாதவர்களுக்குத் தண்ணீராகக் காணப்படும். அதனை நெருங்கிப் பார்த்தவர்கள் அது நீரன்று; கானல் என்பதை உணர்வர்.

அது போல ஆராய்ந்து பாராதவர்களுக்கு மனம் முதலிய தத்துவங்கள் அறியும் தன்மை உடையனவாகத் தோன்றும். நன்ருக ஆராய்ந்து பார்ப்பவர்களுக்கு அவை அறிவில்லன என்பது தெளிவாகும்.

இரவில் கண்ணுக்கு விளக்காகத் தோன்றிய சந்திரனுடைய ஒளி, பகலில் சூரியனுடைய ஒளியில் அடங்கி நிற்பதன்றி முனைத்துத் தோன்ருது. அதுபோல மனம் முதலிய தத்துவங்களும், முதல்வனுடைய அருள் விளக்கத்தில் முனைத்து நிற்கமாட்டா.

அசத்தாகிய தத்துவங்கள் உணர்வில்லன. ஆகலின், சத்தாகிய சிவத்தை அறிந்து அனுபவியா. அருள் விளக்கத்தின் முன்னர் தத்துவங்கள் முனைத்து நில்லாமையின், உயிர் சிவத்தை அறிந்து அனுபவிப்பதற்குக் கருவியாகவும் அவை பயன்படா.

## பாடம் 28

## உயிர் சத்து அசத்து ஆகிய இரண்டனையும் அறிந்து அனுபவிக்கும்

உயிர் அசத்தாகிய பிரபஞ்சத்தை அறிந்து அனுபவிப்பதற்கு மனம் முதலிய தத்துவங்கள் விளக்குப் போலத் துணைசெய்வன. அத்தத்துவங்கள் முதல்வனுடைய அருள்விளக்கத்தில் முனைத்து நிற்கமாட்டா. ஆதலின் முதல்வன் அசத்தாகிய பிரபஞ்சத்தை அறிந்து அனுபவியான். அத்தத்துவங்கள் உணர்வு இல்லன. ஆகலின், அவை சத்தாகிய சிவத்தை அறிந்து அனுபவியா. எனவே உயிரே இவ்விரண்டனையும் அறிந்து அனுபவித்தற்கு உரிமையுடையது என்பது பெறப்படும். அது எதுபோல என்றால், ஒளியையும், இருளையும் அனுபவிக்கும் கண்போல என்க. ஆகவே உயிர் சத்தும் அன்று; அசத்தும் அன்று. அவ்விரண்டினுக்கும் வேறாய தன்மையுடையது. இருள் ஒளியலாக் கண் தன்மை போல்வது. (கண் இருளும் அன்று ஒளியும் அன்று). அசத்தாகிய உலகப் பொருள்களைக் காணுங்கால், அசத்தாகிய தத்துவங்களின் துணை கொண்டு காணும். சத்தாகிய சிவத்தைக் காணுங்கால், அவனுடைய சத்தியாகிய அருளைத் துணைகொண்டு காணும். அசத்தாகிய உலகப் பொருள்களைஅறியுங்கால், அவற்றின் வண்ணமாய் அழுந்தி நின்று அறியும். அதுபோல சத்தாகிய சிவத்தை அறியுங்கால், அச் சிவத்தின் வண்ணமாய் அதில் அழுந்தி நின்றறியும். ஆதலால் உயிர் அறிவிக்க அறியும் இயல்புடையது என்றும். சார்ந்ததன் வண்ணமாய் நின்று அறியும் இயல்புடையது என்றும் கூறுவர். இங்ஙனம் அழுந்தி அறிதலையே அனுபவித்தல் என்பர்.

உயிர் மலப்பிணிப்போடு இருக்கிற காலத்து ஒரே படித்தாயிராமல், நினைப்பும், மறப்பும் மாறி மாறி அடைந்து வருகிறது. அப்பொழுது அது அசத்தாந்தன்மை உடையதாகிறது. மலப்பிணிப்பு நீங்கி வீடு பேறடைந்த காலத்து என்றும் ஒரே படித்தாய் நினைப்பு மறப்பின்றிச் சிவானந்தத்தை அனுபவித்துக் கொண்டிருக்கின்றது. அப்பொழுது அது சத்தாந்தன்மை உடையதாகிறது. இவ்வாறு இரு தன்மைகளை உடையதாயிருப்பதால் உயிரைச் சத சத்து என்பர்.

(சத்து + அசத்து = சதசத்து)

# பாடம் 29.

## தவம்

''உழைப்பின் வாரா வுறுதிகளுளவோ
கழப்பின் வாராக் கையற வுளவோ''

என்பது பட்டணத்துப் பிள்ளையாருடைய திரு வாக்கு. இதன் பொருள் உழைத்தால் வாராத நன்மைகள் இல்லை; சோம்பலால் உண்டாகாத தீமையும் இல்லை என்பதாம். உழைப்பினால் வாராத நன்மை இல்லை என எதிர்மறை முகத்தான் வலியுறுத்திக் கூறினமையால், எல்லா நன்மைகளும் உழைப்பினால் பெறலாம் என்பது பெறப்படும்.

உழைப்பு இரு திறப்படும். ஒன்று புறத்தில் நிகழ்த்தப்படுவது. மற்றொன்று அகத்தில் நிகழ்த்தப்படுவது. புறத்தில் நிகழ்த்தப்படும் உழைப்பு, ஆள்வினையுடைமை எனப்படும். அகத்தில் நிகழ்த்தப்படும் உழைப்பு தவம் என்று சொல்லப்படும்.

புறத்து உழைப்பால் பொருள் வலிமை அடையலாம். அப் பொருளால் உலகில் எல்லா நன்மையும் அடையலாம்.

''பொன்னின் ஆகும் பொருபடை, அப்படை
தன்னின் ஆகும் தரணி, தரணியிற்
பின்னை ஆகும் பெரும் பொருள், அப்பொருள்
துன்னுங் காலை துன்னாதன இல்லையே''

என்பது ஆன்றோர் துணிப்பு.

அகத்து உழைப்பால் ஆத்ம சத்தி எனப்படும் உள்ளத்து வலிமை பெறலாம். அதனால் எல்லா நன்மைகளும் அடையலாம்.

''கூற்றங் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட்டவர்க்கு''

என்பது பொய்யாமொழி

அதன் பொருள் தவத்தான் வரும் ஆற்றலை அடைந்தவர்க்குச் சாவில்லா வாழ்வும் கிட்டும் என்பதாம்.

தவமாவது, தம் உயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்தலும், தாம் பிற உயிர்கட்குத் துன்பம் செய்யாமையும் ஆகும்.

''உற்ற நோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு'' என்பது திருக்குறள்

இத்தவம், இல்லறம், துறவறம், ஆகிய இரண்டு நிலையில் உள்ளாரும் செய்தற்கு உரியது. துறவறத்தில் நிற்பவர் தவம் மிகுதியாகச் செய்தல் கூடும். இல்லறத்தார் சிறிதளவு செய்தல் கூடும். நம் நாடு இப்பொழுது தன்னாட்சி பெற்றது ஆத்ம சத்தியால் என்பது யாவரும் அறிந்த உண்மை. அவ்வாத்ம சத்தியை நம் நாட்டார் பெற்றது உற்ற நோய் நோன்று உயிர்க்கு உறுகண் செய்யாமையாகிய தவத்தால்தான் என்பதும் யாவரும் அறிந்ததே.

---

## பாடம் 30.

## தவம் இரு திறப்படும்.

பயிர்த் தொழில் செய்கின்ற ஒருவன் தண்ணீரைப் பெறுவதற்கு ஒரு கிணறு வெட்டுகிறான். பயிர் செழித்து வளருவதற்கு உரம் போடுகிறான். அந்த உரமானது பயிர் பலன் தருதலோடு தீர்ந்து விடுகிறது. அடுத்த பயிர் செய்யும் பொழுது புதிதாக உரம் போடுதல் வேண்டும். முதற் பயிருக்குத் தோண்டிய கிணறு அதனோடு அழிந்து போவதில்லை. அது நிலைத்து நின்று பின்வரும் பயிர்கட்குப் பயன் தருகிறது. ஆகவே கிணறு தோண்டுதலாகிய வினை அழிவில்லாதவினை. உரம் போடுதல் முதலிய வினைகள் அழிவடையும் வினைகள் என அறிகிறோம். அதுபோலத் தவமும் இரு வகைப் படும். ஒரு வகைத்தவம் பயன் தருதலோடு தீர்ந்து விடும். மற்றொரு வகைத்தவம் அழியாது நின்று எப்பொழுதும் பயன் தரும். யான் என்னும் செருக்குடைய ஒருவன் செய்யும் தவம் பயனைத்தந்து அழியும் தன்மை உடையது. அவன் தவம் செய்யும் பொழுதே இன்ன தவம் செய்தால் இன்ன பயன் விளையும் என்று எண்ணிச் செய்கின்றான் - அது அப்பயனைத் தந்து அதோடு தீர்ந்து விடுகிறது.

செருக்கற்ற ஒருவன் செய்யும் தவம் அழிவில்லாதது. அவன் ''நம்மால் ஆவது ஒன்றும் இல்லை. எல்லாம் முதல்வன் செயல், அவனே நமக்கு எல்லா நன்மையும் செய்கிறான்'' என்ற உணர்ச்சியோடு தவம் செய்கிறான் அவன் செய்யும் தவம் கடவுளை வழிபடுதலும், உற்ற நோய் நோன்றலும், உயிர்க்கு உறுகண் செய்யாமையும் ஆகும். இக்கடவுள் வழிபாடாகிய தவம் அழிவின்றி இவனுக்கு மேன்மேலும் நன்மையைச் செய்துகொண்டே இருக்கும்.

கடவுள் வழிபாட்டால் ஒருவன் அடையும் ஆத்மசத்தி தன்னூற்று நீர்நிலை போல்வது. ஏனைத் தவங்களால் உண்டாகும் ஆத்மசத்தி கால்வரத்துக் குளம், வானமாரிக்குளம் ஆகிய நீர் நிலைகள் போல்வது.

செருக்காவது மயக்க அறிவு. அவ்வறிவு உடையவனுக்குக் காமம், வெகுளி முதலிய குற்றங்கள் உளவாம். அக்குற்றங்களால் அவன் தவம் அழிந்து விடும். மரத்தடியிலிருந்து தவத்தால் ஆத்ம சத்தி அடைந்த கொங்கணவர் தன்மீது காய்ந்த இலையை வீழ்த்திய கொக்கைச் சினந்து நோக்கி எரித்தமையால் ஆத்மசத்தியை இழந்துவிட்டார். அவர் தவம் அழிந்துவிட்டது. திருநாவுக்கரசர் சமணர்கள் தம்மைக் கல்லோடு கட்டிக் கடலில் தாழ்த்தியபொழுது கடவுள் வழிபாட்டால் உண்டாகிய ஆத்மசத்தியால்; கல்லைமிதப்பா கப் பெற்றுக்கரையேறினார். சமணர்கள்மீது சினம் கொள்ளவில்லை. கல்லை மிதப்பாகப் பெற்றமைக்குப் புகழ்ச்சியை விரும்பவில்லை. இறைவன் அருளை வியந்து பாடினார். இவ்வாறு அவரிடம் காமம், வெகுளி, மயக்கம் ஆகிய குற்றங்கள் நிகழாமையால் அவர் தவம் அழியவில்லை.

---

## பாடம் 31.

## அழிவில்லாத தவம் மூன்று வகைப்படும்.

அழிவில்லாத தவமாவது, கடவுள் வழி பாட்டோடு கூடிய தவம். அது செருக்கற்றவர்களால் செய்யப்படுவது. ''கடவுளா லேயே எல்லாக் காரியங்களும் நிகழ்கின்றன. அவரை நாம் வழி பட்டால், அவர் தம் சத்தியால் வேண்டுவனவற்றை எல்லாம் நமக்குக் கொடுப்பார்,'' என்ற உணர்ச்சியோடு செருக்கற்றவர் தவம் செய்வர். உலகில் எல்லோரும் பசித் துன்பத்தைப் போக் கவே உயிர்க் கொலை செய்கின்றனர். ஆகவே தவம் செய்வோர் பசியைப் பொறுத்து உயிர்க் கொலை செய்யாமையாகிய நோன்பை மேற்கொள்வர்- ஆனது பற்றியே ஔவையார் 'நோன்பு என்பது கொன்று தின்னாமை'' என்று அருளினார் ஊன் உண்டு வாழ்வோர் சில குறிப்பிட்ட நாட்களில் ஊன் உண்ணாமையாகிய நோன்பைக் கைக்கொண்டு கடவுள் வழிபாடு செய்வர். ஊன் உண்ணாதோர் ஓரறிவுயிர்க்கும் தீங்கு செய்யாமையாகிய நோன்பைக் கைக் கொண்டு குறிப்பிட்ட நாட்களில் கடவுள் வழிபாடு செய்வர். அவர் களிற் சிலர் நாள்முழுதும் ஒன்றும் உண்ணாமல் பசியைப் பொறுத் துக்கொண்டு வழிபாடு ஆற்றுவர். சிலர் பழங்களிலுள்ள சதைப்

பற்றை உண்பதால் ஓரறிவுயிர்க்கும் கேடில்லை; ஆகலின் அப்பழங்களை உண்டு வழிபாடு ஆற்றுவர். இத்தகைய கடவுள் வழிபாட்டோடு கூடிய தவமே அழிவில்தவம் என்று சொல்லப்படும்,

அது முதலில் புறத்தில் உருவ வழிபாடாகத் தோன்றும். அது நாளடைவில் மனத்திலும் நிகழ்ந்து, அகம் புறமாகிய இரண்டிடத்தும் நிகழ்த்தப்படும் அறிவு வளர வளர இறைவன் எங்கும் நிறைந்திருக்கின்ற தன்மையை மனத்தில் பாவித்து அகத்தில் மட்டும் வழிபாடு நிகழ்த்தப்படும்.

புறத்தில் மட்டும் செய்யப்படும் வழிபாடு சரியை என்று சொல்லப்படும். அகம் புறமாகிய இரண்டிடத்தும் செய்யப்படும்வழிபாடு, கிரியை என்று சொல்லப்படும். அகத்தில் மட்டும் செய்யப்படும் வழிபாடு, யோகம் என்று சொல்லப்படும்.

இம் மூவகை வழிபாடும் அரும்பு, மலர் காய் போல்வன அரும்பு இன்றி மலர் உண்டாகாது. மலர் இன்றிக் காய் உண்டாகாது. அது போலச் சரியை இன்றிக் கிரியை நிகழாது. கிரியை இன்றி யோகம் நிகழாது.

---

## பாடம் 32.

## மூவகைத் தவத்துக்கும் முடிந்த பயன் ஞானம்.

மூவகைத் தவங்களுள், சரியையில், புறத்தில் ஒரு உருவத்தில் வழிபாடு நிகழ்த்துதலால், அதனை உருவ வழிபாடு என்பர். கிரியையில், மனத்தில் தோன்றும் ஒரு உருவத்தில் வழிபாடு நிகழ்த்துதலால், அதனை அருவுருவ வழிபாடு என்பர். அருவுருவமாவது உருவமுமாகாது; அருவமுமாகாது; நடுநிலையில் இருப்பது. யோகத்தில், இறைவன் எங்கும் நிறைந்த தன்மையை அருவமாக நினைந்து வழிபடுதலால், அதனை அருவ வழிபாடு என்பர். அந்த அருவம் எங்கும் நிறைந்த ஆகாயம் போன்ற அல்லது எங்கும் நிறைந்த ஒளி போன்ற ஒன்றாகப் பாவிக்கப்படும். இம்மூவகை வழிபாடும் உலகப் பயன்களைக் கருதியே செய்யப்படும் அங்ங

னம் வழிபடுலாகிய தவம் இவர்கள் விரும்பிய உலகப் பயன் களைத் தருதலோடு அமையாமல் அறியாமையைப்போக்கி அறிவை வளர்த்தல் வாயிலாகப்படி முறையில் உண்மை ஞானத்தில் செலுத்தும். ஆகவே இம்மூவகை வழிபாட்டின் முடிந்த பயன் உண்மை ஞானமாகும். இம்மூவகைத் தவத்தையும் செய்பவன் தான் விரும்பிய உலகப் பயன்களைத் தப்பாது பெறுகின்றான். அப் பயன்கள், இன்பம் தருவன என்று முதலில் எண்ணினான். அவை துன்பம் தருதலை. அவற்றைப் பெற்ற பின்னர் காண்கிறான், கண்ட பின், இத்துன்பம் தருவனவற்றை இறைவனிடம் வேண்டின அறி யாமைக்கு வருந்துகிறான். இங்ஙனம் நாளடைவில், நல்வினை தீ வினை ஆகிய இருவகை உலகியற் பயனும் துன்பத்துக்கு ஏது என்ற உணர்ச்சியைப் பெறுகிறான். இத்தகைய உணர்வு நிலையை இருவினை ஒப்பு என்பர். இவ்விருவினை ஒப்பு வரப்பெற்றவனே உண்மை ஞானத்தைப் பெறுதற்கு உரியவன். இம்மூவகை வழி பாடும் ஆற்றுபவர், இவ்வுலகப் பயன்களைப் பெற்று வாழ்ந்த பின்னர் தாங்கள் வழிபடும் தெய்வ உலகத்து வாழ்வு பெறுவர். ஆனால் சரியையாளர், அவ்வுலகத்தில் அத்தெய்வத்தின் அடிமை போலவும்; கிரியையாளர், அத்தெய்வத்தின் பிள்ளை போலவும்; யோகிகள், அத்தெய்வத்தின் தோழன் போலவும் வாழ்வர்.

---

## பாடம் 33.

## முன்செய் தவத்தால் ஞானம் நிகழும்

சரியை கிரியை யோகங்கள் அழிவில்லாத தவங்கள். அவை நிகழும் போதே உயிர் படிமுறையால் அறியாமை நீங்கப் பெற்று அறியவல்லது ஆகும். இவ்வாறு பல பிறவிகளில் செய்த தவப்பயனாக ஒருபிறவியில் உயிர்கள் ஞான நெறியைத் தலைப்படும். சரியை கிரியா யோகங்கள் அரும்பு. மலர், காய், போல்வன ஆதலின் அவற்றின் பயனாக விளைகின்ற ஞான நெறி கனி போல்வது ஆகும்

ஞான நெறியைத் தலைப்பட்ட உயிர் ஞான பூசையினைச் செய்து வரும்.

ஞான பூசையாவது ஞான நூல்களை ஓதுதலும், பிறரை ஓதுவித்தலும், ஞான நூல்களைப் பிறர்க்குத்தான் அறிந்த அளவில் சொல்லுதலும், குருவினிடம் உண்மைப் பொருளைக் கேட்டறிதலும், பின் அவற்றைச் சிந்தித்து அறிதலுமாக ஐந்து வகைப்படும்

இங்ஙனம் நிகழ்த்திவரும் ஞான பூசையால் உயிர் இறைவனுடைய திருவடியை அடைந்து பேரின்பம் நுகரும்.

ஞான பூசை ஐந்தனுள், ஞான நூல்களை ஓதல், ஓதுவித்தல் கேட்பித்தல் ஆகிய மூன்றும் நிகழும் காலத்து ஐய உணர்வு திரிபு உணர்வுகளும் உண்டாகும். குருவினிடம் கேட்டற் காலத்தில் தான் ஐயம், திரிபு, அறியாமைகளின் நீங்கிய உண்மை உணர்வு உண்டாகும்.

சரியை, கிரியை, யோகங்களாகிய தவங்கள் ஞான நெறியில் செலுத்தியே உயிருக்கு வீடு பேற்றை நல்கும். அத்தவங்கள் தாமே, வீடு பேற்றை நல்கா. அது போலத் தீக்கை முதலிய கிரியை நிகழ்த்தப் பெற்றார்க்கும், அவை ஞானத்தைக் காட்டியே வீடு பேற்றைத் தரும். ஆதலால் ஞான நெறியையே நன்னெறி என்று ஆன்றோர் வழங்குவர். ஆனது பற்றியே தாயுமானவர்.

''மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கு
வார்த்தை சொல்லச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே,''

என்றும்

''விரும்பும் சரியை முதல் மெய்ஞ் ஞானம் நான்கும்
அரும்பு மலர் காய் கனிபோல் அன்றோ பராபரமே,''

என்றும்

அருளிச் செய்தனர்.

---

## பாடம் 34.

## முதல்வனே குருவாய் நின்று உணர்த்துவான்.

அழிவில்லாத தவங்களாகிய சரியை, கிரியை, யோகங்களின் பயனாக உயிரைப் பற்றியுள்ள அறியாமையாகிய மலத்தின் வலி தேய்ந்து கொண்டே வரும்.

தேயத் தேயப் பிறப்பு துன்பம் என்றும் உணரும்,

பிறப்பு இருவினைப் பயன்களை நுகர்தற் பொருட்டு உண்டாவதாகலின், இருவினைகளின் நீங்க வேண்டும், என்று விரும்பும். நல்வினைப் பயன் இன்பம் தருவதாயினும், அப்பயன்

அழியும், 'தன்மைத்து ஆதலின், அது அழியுங்கால் மிக்க துன்பத்தினை விளைக்கும். இவ்வாறு இருவினைகளும் துன்பத்திற்கு ஏது என்பதை உயிர் உணரும். உணர்ந்து அவற்றின் நீங்க அவாவும்.

இந்நிலையில் உயிர் அறிவில் இருவினை ஒப்பு நிகழும், இப்பொழுது மலத்தின் வலி தேய்ந்திருப்பதால், உயிர். உண்மையை அறிவித்தால் அறியவல்லதாய்இருக்கும். இந்நிலையை உயிரின் மலபரிபாக நிலை என்பர்.

வினைத் தொடக்கின் நீங்க வேண்டுமென்று உயிரினிடத்து நிகழும் அவா திருவருட் சத்தி பதிதலால் உண்டாவது. அச்சக்தி பதிதல் மலத்தேய்வின் ஏற்றத் தாழ்விற்கேற்பக் கூடியும் குறைந்தும் நிகழும்.

ஆகவே சத்தி பதிதலும் நால் வகைப்படும். அவை தீவிர தரம், தீவிரம், மந்தம், மந்ததரம் எனப்படும். தீவிரதரச் சத்தி நிபாதம் உடையோர்க்கு வீடு பேறு எய்தலில் அவா, மிக்கு நிகழும் அவர்கள் உடனே முத்தி எய்தற்கு உரிமையுடையவர்கள். ஏனையோர் முத்தி பெறுதற்குரிய வழிகளாகிய ஞான நூல்களில் பயின்று முத்திபெறுவர். அவர்கள் தாங்கள் பயிலுங்கால், அங்ஙனம் பயிலுதற்குரிய பிறரைப் பயிற்றுவதும் செய்வர்.

இந் நால்வகைச் சத்தி நிபாதம் உடையவர்க்கும் முதல்வனே குருவாய் வந்து உண்மையை உணர்த்துவன். அங்ஙனம் உணர்த் துங்கால் சிலருக்கு உள் நின்றே உணர்த்திடுவன். அங்ஙனம் உணர்த்தற்கு உரியோர் மாயை கன்மமாகிய இரு மலங்களின் நீங்கி, ஆணவமாகிய ஒரே மலப் பிணிப்பு மட்டும் உடையவர்கள் (விஞ்ஞானகலர்) வேறு சிலருக்கு அவர்கள் வழிபடும் கடவுள் வடிவத்தோடு தோன்றி உண்மையை உணர்த்துவன். இவ்வாறு உணர்த்துதற்கு உரியோர் மாயா மலத்தின் நீங்கப்பெற்று ஆண வம் கன்மமாகிய இரண்டு மலத்தின் பிணிப்புடையவர்கள். (பிரளயாகலர்) இன்னும் சிலருக்கு மக்கள் வடிவத்தில் மறைந்து நின்று உண்மையை உணர்த்துவன். இங்ஙனம் உணர்த்துதற்கு உரியார், ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலப் பிணிப்பும் உடையவர் (சகலர்.)

---

## பாடம் 35.

## ஆன்மாக்களுக்குத் தம் உண்மை இயல்பை முதல்வனே உணர்த்துவான். கருவிகள் உணர்த்தமாட்டா.

பளிங்கு தன்னை அடுத்துள்ள பொருளின் நிறத்தைத் தன் நிறமாகக் கொண்டு காட்டும். அது போல ஆன்மாவும் கருவிகளால் காட்டப்பட்ட புலன்களைச் சார்ந்து, அவ்வண்ணமாய் நின்று அதனை அறியும், அங்ஙனம் அறியும் பொழுது மற்றொன்றையும் அறியாது. பின் அதனை விட்டு வேறு ஒரு புலனை அறியுங்காலும் அவ்வண்ணமாகவே நின்று அதனை அறியும்.

இங்ஙனம் கருவிகளால் ஆன்மா உணர்வது அக்கருவிகளால் காட்டப்படும் ஐம்புலன்களையே. ஆகவே உயிர் கருவிகளோடு கூடித் தன்னுடைய உண்மை இயல்பை உணர்தல் கூடாது. அறியாமையில் அழுந்திக்கிடந்த உயிர்க்கு அதன் பொது இயல்பாகிய ஐம்புல அறிவு விளங்கப் பெற்றமையே ஐம்பொறி, மனம், முதலிய கருவிகளாலாகிய நன்மை.

ஆதலால் ஆன்மாவின் உண்மை இயல்பை உணர்த்த முதல்வனே குருவாய் வருதல் வேண்டும்.

முதல்வன் குருவாய் வந்து உணர்த்தும் காலத்து, ஆன்மா கருவிகளின் நீக்கித் தன் உண்மை இயல்பை உணர்கிறது. அவ்வருளை இன்றித் தனக்கு உணர்வு இல்லாமையையும் அறிகிறது, அப்பொழுது முதல்வன் தன்னியல்பை எல்லாம் ஆன்ம அறிவில் விளங்கச் செய்கிறான். ஆன்மாவின் இயல்பு, ஒன்றனை அறியுங்கால் அவ்வண்ணமாய் நின்று, அதனில் அழுந்தி அதனை அறியும், ஆதலால் முதல்வனை அறியுங்கால், அவ்வண்ணமாய் நின்று அதனில் அழுந்தி அதனை அறியும்.

முதல்வன் குருவாய் வரும்பொழுது, தனக்கு ஒரு வடிவு புதிதாய் உண்டாக்கிக் கொண்டு வருவதில்லை. அவன் எல்லா உயிர்களோடும் கலப்பினால் ஒன்றேயாய் நிற்பவன். ஆகவே மலமாசு நீங்கிய ஒரு ஆன்மாவினிடத்தில் வெளிப்பட்டு நின்று உணர்த்துவன். வெளிப்பட்டு நிற்றலாவது தெய்வம் கொண்டாடியிடத்துத் தெய்வம் வெளிப்பட்டு நிற்பது போல்வது.

# பாடம் 36.

## ஆன்மா கருவிகளின் நீங்கியதும் முதல்வன் திருவடியை அடையும்

ஆன்மா மலத்தோடு கூடி உணர்வற்றுக் கிடந்த நிலையில் கருவிகளோடு கூடிச் சிற்றுணர்வை அடைந்தது. அப்பொழுது கருவிகளின் நீங்கினால், மலத்தோடு கூடி அறியாமை நிலையை அடைந்து விடும். மீண்டும் கருவிகளைக் கூடின் அறிவு விளங்கப் பெறும். அக்காலத்தில் உயிர் கருவிகளின் நீங்குவதும் இல்லை, கருவிகளைக் கூடுவதும் இல்லை. கருவிகள் தாமே முதல்வனது அருளால் உயிர்களினிடத்து வந்து பொருந்தித் தொழிற்படும், அல்லது தொழிற்படாது நீங்கும். முதல்வன் குருவாய் வந்து ஆன்மாக்கட்கு உண்மையை உணர்த்துங்கால் கருவிகள் தம் தம் தொழிற்பாட்டில் மடங்காது நிற்கும், அப்படி நிற்கும் பொழுதே, ஆன்மா, அவற்றது இயல்புகளைக் குரு அருளால் உணர்த்தப் பெற்று அவற்றை விட்டு நீங்கும். நீங்கியகாலத்தில் முன்போல அறியாமையை அடையாமல், அருள் விளக்கத்தில் அறிவோடு விளங்கும். அவ்வருள் விளக்கமே முதல்வனுடைய திருவடியாகும், குருவடிவமும் அதுவே.

இவ்வுண்மைகளை முதல்வன் அருளால் ஆன்மா காண்கின்றது. காணவே சிவபெருமானே குருவாய்வந்து உணர்த்தினான் என்ற உண்மையைத் தெளியக் காண்கின்றது. ஆனது பற்றியே மாணிக்கவாசகர்

''சிவனென யானும் தேறினன் காண்க'' என்று அருளிச் செய்தனர்

இங்ஙனம் இறைவன் உணர்த்துவது பக்குவம் அடைந்த ஆன்மாக்களுக்கே பக்குவமாவது உணர்த்தினால் உணரவல்லநிலை அந்நிலை அடைந்தவர்கள் இருவினை ஒப்பு வரப்பெற்றவர்களாக இருப்பார்கள். இருவினை ஒப்பாவது நல்வினை தீவினை ஆகிய இரண்டு வினைகளிடத்தும் விருப்பம் நிகழாமை. பக்குவம் வரப் பெற்றோர், 'இரு வினையும் பிறப்பிற்கு ஏது, பிறப்பு துன்பத்திற்கு ஏது, என்ற உணர்வுடையவர்கள். அவர்கள் எப்பொழுது நாம் இருவினைத் தொடக்கினின்றும் நீங்குவோம்? அதற்கு வழியாது'?

என்று நாடியிருப்பர். இந்த நாட்டம் மிகுதியாக உடையவர்கள் உண்மையை உணர்ந்ததும் அதிலேயே அழுந்திவிடுவர். பின்கருவிகளோடு கூடவே மாட்டார்கள்.

---

## பாடம் 37.

## வினைத்தொடக்கின் நீங்கியோர் நடமாடக் கோயில் நம்பர் ஆவர்

இருவினை ஒப்பு வந்து வினைத்தொடக்கினின்றும் நீங்குதலில் மிகுந்த நாட்டமுடையோர் உண்மையை உணர்ந்து அதிலேயே அழுந்திவிடுவர். பின் கருவிகளோடு கூடவே மாட்டார்கள்.

சிறிது குறைந்த நாட்டமுடையவர்கள் உண்மையை உணர்ந்து அதில் அழுந்தியபின் கருவிகளோடு கூடி உலகத்தையும் காண்பர். அங்ஙனம் காணும்பொழுது வினைத்தொடக்கின் நீங்கி நின்றே காண்பர். அணைகடந்து சென்ற ஆற்று நீர் கடலோடு கலந்து பின்னர் ஆற்றிற்கு மீண்டும் வராது. ஒருகால் வந்தாலும் ஆற்று நன்னீராய் மீளாது கடலிலுள்ள உப்பு நீராகவே மீண்டு ஆற்றில் வரும். அது போலச் சிவத்து உண்மைகண்டு அதில் அழுந்தியோர் ஒன்றி நின்று காண்பர். அப்பொழுது கருவிகளும் சிவகரணங்களாகத் தொழிற்படும். சிவத்தோடு ஒன்றி நிற்றலாவது தன்னை மறந்திருத்தல்.

இத்தகையோர் வினைத்தொடக்கின் நீங்கியோராவர் இவர்களே அறு தொழிலோர் என்று சொல்லப்படுவர். அறு தொழிலோர் என்ற சொற்குப் பொருள் செயல் அறுத்தோர் அல்லது வினையின் நீங்கியோர் என்பதாகும். இங்ஙனம் வினையின் நீங்கி உண்மை விளங்கப்பெற்ற அறிவினை உடைய முனைவர்களே உலகத்தாருக்கு அறம், பொருள், இன்பம் வீடு, ஆகிய நாற் பொருளையும் உரைத்தற்கு உரியவர்கள் இவர்கள் பார்க்கும் இடமெங்கும் நீக்கமற நிறைந்திருக்கின்ற பரிபூரண ஆனந்தத்தை அனுபவிப்பார்கள். இவர்கள் அரசராய் இருந்து அரசாளினும் ஆளுவர். மனைவிமக்களோடு கூடி இல்லறம் நடாத்தி இன்புற்றிருப்பினும் இருப்பர். அவர்கள் அகப்பற்றற்று இருப்பர். ஆதலால் அவர்களை வினை

சாருதல் இல்லை. ஆதலால் அவர்களுக்கு வினைப் பயனாக வரும் பிறவித்துன்பமும் இல்லை. அவர்கள் சிற்றின்பம் நுகருபவர் போல நமக்குத் தோன்றினும் அவர்கள் உண்மையில் பேரின்பத்தையே நுகர்ந்து கொண்டிருப்பர். திருத்தொண்டர் புராணத்தில் சொல்லப்படும் அடியாரெல்லாம் அத்தகையோரே.

''பெற்ற சிற்றின்பமே பேரின்பமாயங்கே
முற்ற வரும் பரிசு உந்தீபற
முளையாது மாயை என்று உந்தீபற''.
—திருவுந்தியார் 33

---

## பாடம் 38.

## வேதம் ஆகமம் இரண்டும் இறைவன் நூல்

உயிர்கள் அறிவிக்க அறியும் தன்மை உடையன. உயிர்கட்கு இறைவனே அறிவிக்கிறவன். அங்ஙனம் அறிவிக்கும் பொழுது உயிர்களின் பக்குவம் அறிந்து அறிவிக்கின்றான்.

அறிவிக்கப்படும் பொருள் இரண்டு வகைப்படும். ஒன்று உலகியல், மற்றொன்று வீட்டியல். உயிர்கள் உலகியல் இன்பம் அடைதற்பொருட்டு உலகியல் ஒழுக்கம் உணர்த்துகின்றான். வீடு பேற்றின்பம் அடைதற்பொருட்டு மெய்ந்நெறி ஒழுக்கம் உணர்த்துகின்றான்.

உலகியல் ஒழுக்கம் கூறும் நூல் வேதம் என்று சொல்லப்படும். மெய்ந்நெறி ஒழுக்கம் கூறும் நூல் ஆகமம் என்று சொல்லப்படும். உலகியல் ஒழுக்கம் கூறும் நூல் உலகில் வாழ்வார் அனைவர்க்கும் வேண்டப்படும் ஒரு பொது நூல். மெய்ந்நெறி ஒழுக்க நூல் உலகியல் இன்பத்தை விரும்பாது வீடு பேற்று இன்பத்தை அடைய அவாவுவோர்க்கு மட்டும் உரியது. இவ்விரு வகை நூல்களையும் பக்குவமுடையோர்க்கு உணர்த்தி அவர்கள் வாயிலாக உலகில் நிலவச் செய்கின்றான்.

வேதம், உலகில் நல்வினை, தீவினை, என்பன எவை என்பதையும், அவற்றுள் நல்வினைகள் செய்யத்தக்கன, தீவினைகள் செய்யத்தகாதன என்பதையும் எடுத்துக்கூறும்.

ஆகமம், உயிர், கடவுள், உலகம் ஆகிய முப்பொருளின் இயல்பையும், மெய்ந்நெறி ஒழுக்கத்தையும் விளக்கிக் கூறும்.

வேத நூல் வழி ஒழுகுவார் உலகியல் இன்பம் பெற்று வாழ்வர். ஆகம வழி ஒழுகுவோர் இறைவன் திருவடிப் பேற்றின்பம் அடைவர். உலகியல் ஒழுக்கம் அறம், பொருள், இன்பம் என மூன்று வகையால் சொல்லப்படும் வீட்டியல் ஒழுக்கம் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு வகையால் சொல்லப்படும் வேத நூல், உலகியல் ஒழுக்கம் கூறும் நூல் என்ற உண்மையை, ''உலகியல் வேத நூல் ஒழுக்கம்'' என்னும் சேக்கிழார் வாக்கால் அறியலாம், வேதம் அனைவர்க்கும் பொது நூல் என்பதை.

''வேத மோடாகமம் மெய்யாம் இறைவன் நூல்
ஓதும் பொதுவும் சிறப்பும் என்றுன்னுக''

என்னும் திரு மூலர் திருமந்திரத்தால் அறியலாம்.

---

## பாடம் 39.

### ''உயிர் சிவத்தை அவன் அருளால் காணும்''

கண்கள் காணும் தன்மை உடையன. ஆனால் அவை சூரியன் ஒளியோடு கூடி நின்றே காணவல்லன. சூரியன் ஒளியோடு கூடி நின்று கண்கள் உலகத்தில் உள்ள பொருள்களைக் காணும். அவ்வொளியோடு கூடி நின்று சூரியனையும் காணும். சூரியன் ஒளியோடு கூடாமல் கண்கள் ஒரு பொருளையும் காண மாட்டா.

உயிர்கள் கண்போன்றன. சிவன் சூரியன் போன்றது. உயிர்கள் அறியும் தன்மையன. ஆனால் அவை அவன் அருளோடு கூடிநின்றே அறியும் தன்மையன.

உயிர்கள் அருளோடு கூடி நின்று உலகத்தையும் அறியும். அவ்வருளோடு கூடி நின்றே சிவத்தையும் அறியும். அருளோடு கூடாமல் உயிர்கள் ஒன்றையும் அறியமாட்டா.

உயிர் தன்னை மனம் முதலிய கருவிகளின் வேருகக்கண்டது, அச்சிவத்தின் அருளாலேயே. அந்த அருளோடு கூடி நின்றே, உயிர் சிவத்தையும் காணும். அப்பொழுது அருளே சிவத்தைக்

காட்டி நிற்கும். இங்ஙனம் உயிர் தன் அறிவின் கண்ணேயே சிவத்தைக் காணுதல் கூடும். அங்ஙனம் கண்டவர்களே சிவத்தை அடைந்தோராவர்,

''மைப்படிந்த கண்ணாளும் தானும் கச்சி
மயானத்தான் வார் சடையான் என்னினல்லால்
ஒப்புடையன் அல்லன் ஒருவனல்லன்
ஒரூரனல்லன் ஓருவமனில்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும்
அவனருளே கண்ணாகக் காணினல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொணாதே''

— திருநாவுக்கரசர் —

---

## பாடம் 40.

## குறிகளும் அடையாளமும்.

குறிகள் பொருள்களை உணர்த்தும். சொற்களெல்லாம் குறிகளே. சொற்களைக் கேட்டதும் பொருள்களை நாம் கருத்தில் உணருகிறோம். சொல்லாகிய குறிகள், அவற்றால் உணர்த்தப்படும் பொருள்களிடத்தில் காணப்படா. குறிகள் ஓரிடத்தில் உள்ளனவாயும் பொருள்கள் வேறு ஓரிடத்தில் உள்ளனவாயும் இருக்கும்.

நாள் தோறும் ஒரு வீட்டிற்குப் பால் கொடுக்கும் ஒருவன் ஒவ்வொருநாளும் சுவரில் ஒரு புள்ளியை வைத்து விட்டுப் போவான். அப்புள்ளிகளால் பால் கொடுத்த நாட்களை அறிந்து கொள்கிறான். அப்புள்ளிகள் நாட்களை உணர்த்தும் குறிகளாக அமைந்துள்ளன.

வண்ணான் வேட்டிகளில் சில குறிகளை வைக்கிறான். அவை அவ்வேட்டிக்கு உரியவனை உணர்த்துகின்றன.

இக்குறிகளெல்லாம் அவற்றால் உணர்த்தப்படும் பொருள்களை அறிந்தவர்க்கு நினைப்பூட்டும் முறையில் உணர்த்துவன.

அடையாளங்கள் உணரப்படும் பொருளிடத்தில் உள்ளன.

கோவிலில் அறுபத்துமூன்று நாயன்மார்களின் உருவங்கள் செய்து வைக்கப்பட்டிருக்கும். அவற்றுள் திருநாவுக்கரசருடைய

உருவம் யாது என்பதைக் கையில் ஏந்தியிருக்கும் உழவாரப்படையால் அறிகிறோம். அவ்வுழவாரப்படையே திருநாவுக்கரசரை உணர்த்தும் அடையாளமாம். கொன்றைமாலை நெற்றிக்கண் முதலியவை சிவபெருமானை உணர்த்தும் அடையாளங்களாம். இவ்வடையாளங்களெல்லாம் அவற்றால் உணர்த்தப்படும் பொருளினிடத்தில் இருப்பதைக் காணலாம்.

வண்ணான் வேட்டியில் அமைத்தகுறி வேட்டிக்கு உரியவனை உணர்த்தும் பொழுது குறியாகும். ''இன்னமாதிரி வண்ணான் குறியுடையது என் வேட்டி'' என்று ஒருவன் சொல்லும்பொழுது அக்குறி அவ்வேட்டியை உணர்த்தும் அடையாளமாகிறது.

ஒருவன் தான் முன் கண்டறியாத ஒரு பொருளைக் காண விரும்புகிறான். அப்பொழுது அப்பொருளை முன் கண்டறிந்த ஒருவன் அப்பொருளிலும், அப்பொருளை அடைதற்குச் செல்லும் நெறியிலும், உள்ள அடையாளங்களை எல்லாம் சொற்களாகிய குறிகளால் உணர்த்துகிறான்.

எடுத்துக்காட்டாக இவ்வூரிலுள்ள துறைமுகத்தை அறிய விரும்புபவனுக்கு, இவ்வூரார் சொல்வனவற்றைக் கொள்ளலாம். கடற்கரை ஓரமாகச் சென்றால் பலதோணிகள் நங்கூரம் இடப்பட்டிருக்கும் இடத்தைக் காண்பாய். அதுவே துறைமுகம் என்பார்கள். இதில் செல்லும் நெறியிலுள்ள அடையாளம் கடற்கரை. துறைமுகத்தின் அடையாளம் தோணிகள் நங்கூரம் இடப்பட்ட இடம். இவற்றை உணர்வதற்காக ஊரார் சொன்ன சொற்களெல்லாம் குறிகள்.

---

## பாடம் 41.

## ஆன்மாவையும் அருளையும் காணுதற்கு ஆன்றோர் கூறிய அடையாளங்கள்

ஆன்றோர்கள் கடவுளைக் காண விரும்பும் ஒருவனுக்கு அவன் செல்லவேண்டிய நெறிகளையும் கடவுளையும் காணுமாறு குறிகளாலும் அடையாளங்களாலும் விளக்கியுள்ளார்கள்.

ஆன்மாவைக் காணுதற்கு ஒரு அடையாளம் கூறியிருக்கிறார்கள். ஆன்மா உடம்பில் நிலைபெற்றே ஒன்றை அறிகிறது. ஒன்றைச் செய்கிறது.

ஆகவே, ஆன்மாவை அது உடம்பில் நிலை பெற்றிருக்கும் போதே காணுதல் வேண்டும். உடம்பு முழுவதும் பிணமாகக் கிடக்கும் பொழுது அறிவும் தொழிலும் இன்றி இருக்கக் காணுகிறோம். ஆதலால் உடம்பு ஆன்மா அல்ல என்று உணருகிறோம். ஐம்பொறிகள் ஒன்று அறிந்ததை மற்றொன்று அறியாமையின் அவை ஆன்மா அல்ல என்று உணருகிறோம். மனம் முதலிய அந்தக்கரணங்களும், ஒன்று செய்த தொழிலை மற்றொன்று செய்ய மாட்டாமையின், அவை ஆன்மாவல்ல என்று உணருகிறோம். இவ்வாறு உடம்பையும், உடம்பிலுள்ள ஐம்பொறி அந்தக்கரணங்களையும், ஆன்மாவல்ல என்று கழித்து விட்ட விடத்து, அங்ஙனம் கழித்த உணர்வு ஒன்று உளதாம். அதுவே ஆன்மா என்று கூறுவர் ஆன்றோர்.

இவ்விடத்தில் ஆன்மாவுக்கு அடையாளம் உடம்பிலுள்ள ஒவ்வொரு தத்துவத்தையும் இது ஆன்மாவன்று, இது ஆன்மா வன்று என்று கண்டு கழித்து நிற்கிற உணர்வாம்.

அது போலக் கடவுள் அருளைக் காணுதற்கும் அடையாளம் கூறுகின்றனர் ஆன்மாவின் அறிவில் உலகிலுள்ள பொருள்க ளனைத்தும் புதிது புதிதாகத் தோன்றி, நின்று, மறைந்துகொண்டே இருக்கின்றன. இவையனைத்தும் நிலையில்லாத பொருள்கள்: மாயையின் காரியங்கள்; அறிவற்றன; முதல்வன் அருளால் தொழிற்படுகின்றன.

**இறைவனுடைய அருளே எனக்கு உடன் நின்று உணர்த்துகிறது என்று ஒருவன் அறிய வல்லனாயின் அவ் விடத்தில் அவனுக்கு விளங்குகின்ற அறிவு வடிவமே இறைவன் அருள் வடிவமாம்.**

---

## பாடம் 42.

## மந்திரங்கள்

மந்திரங்கள் இரண்டு வகைப்படும். ஒருவகை மறைமொழி யாகிய மந்திரங்கள். மற்றொரு வகை பாவனை மந்திரங்கள். மறை மொழியாகிய மந்திரங்கள் நிறைமொழி மாந்தரால் சொல்லப்படு வன. நிறைமொழி என்பது அருளிக்கூறினும், வெகுண்டு கூறினும்

அவ்வப்பயன்களைத் தந்தேவிடும் மொழி. காம வெகுளி மயக்கங்களாகிய மூன்று குற்றங்களும் நீங்கியோரே நிறைமொழி மாந்தர் எனப்படுவர். அவர்கள் அருளிக்கூறுதலும், வெகுண்டு கூறுதலும் தன் பொருட்டல்ல. பிறர் நன்மையின் பொருட்டே கூறுவர். அவர்கள் கூறும்மொழி உடனே பயனை விளைக்கும். திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர் முதலிய நாயன்மார்கள் அத்தகைய நிறைமொழி மாந்தர் ஆவர். அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய பாடல்களின் பயனாக ஆண்பனை பெண்பனையாயிற்று. எலும்பு பெண்ணுருவாகியது. நோய்கள் நீங்கின. பலர் நன்னெறியைத் தலைப்பட்டனர். இவ்வாறு அம்மறை மொழிகள் அறம், பொருள், இன்பம், வீடு, ஆகிய நாற்பொருளையும் பயத்தலால் அப்பாடல்களின் தொகுதி நான்மறை என்று சொல்லப்படும்.

''நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப''

என்ற தொல் காப்பியச் சூத்திரத்தால் மறைமொழியாகிய மந்திரங்களின் உண்மையை உணர்ந்து கொள்ளலாம்.

பாவனை மந்திரங்கள் அதனைப் பாவிப்பவர் அப்பாவனையில் உறைத்து நிற்றலால் பலன் தருவன.

எடுத்துக்காட்டாகக் கருட பாவனையைச் சொல்லலாம். கருடன் மூன்று வகைப்படும். உலகத்தில் நாம் காண்கின்ற கருடன் பௌதிக கருடன். அதாவது ஐம்பூதங்களால் உண்டான ஒரு உருவம். அதுபோல ஒருவன் தன் உள்ளத்தில் காண்கின்ற கருடன் தைவிககருடன். அக்கருடவடிவம் ஐம்பூதங்களால் ஆனது அல்ல. அது உள்ளத்தில் ஒரு தெய்வசத்தியோடு விளங்கும் வடிவம். அவ்வடிவத்தை மந்திரவடிவம் என்பார்கள். அந்த மந்திரவடிவமே தானாகப்பாவனை செய்து தன் அறிவு அதன் வசமாகும்படி ஒருவன் உறைத்து நிற்க வல்லனாயின் அம்மந்திரத்தினிடமாக நின்று சிவ சத்தி பலன் கொடுக்கும்.

அந்தச்சிவசத்தி ஆன்மிக கருடன் என்று சொல்லப்படும். இவ்வாறு கருட பாவனையில் பௌதிககருடன், தைவிக கருடன், ஆன்மிக கருடன், எனக்கருடன் மூவகைப்படுவதைக் காண்கிறோம்.

இதுபோலவே பாவனை மந்திரங்கள் எல்லாவற்றிலும் மூவகைப் பொருள்கள் உள்ளன. கருட பாவனை செய்பவன் மந்திர ரூபமாகிய தைவிக கருடனே தானாகப் பாவனை செய்து தன் அறிவு

அதன் வசமாம்படி உறைத்து நின்று பார்ப்பானுயின் அப்பார்வை யால்விடம் நீங்குகிறது. இக்கருட பாவனே மந்திரம் விடம் நீக்கு தலாகிய ஒரு பயனே மட்டும் செய்யும் அது போலவே ஏனைப்பா வனே மந்திரங்களும் ஒவ்வொன்றும் வெவ்வேறு பயனே விளைக்கும்.

## பாடம் 43.

## சிவஞானத்தைக் காணும் வழி

சிவஞான மென்பது சிவத்தை உயிருக்குக் காட்டுகின்ற ஞானம். அது சிவபெருமானுடைய அருளே. அருள் என்பது அவனுடைய சத்தியே. அதனைத் திருவடி ஞானம் என்றும் சொல்லு வார்கள். அத்திருவடி ஞானத்தை மலபரிபாகம் எய்தப்பெற்ற உயிர்களே அடைதல் கூடும். மலபரிபாகமாவது, உணர்த்தினுல் உணரவல்ல தன்மை. மலபரிபாகம் எய்திய உயிர், ''பிறப்பு துன் பத்திற்குக் காரணம்'', என உணரும். ஆகவே பிறவாமையை அடைய விரும்பும் அந்த நிலையில் முதல்வன் குருவாய் வந்து அடி யில் வருமாறு திருவடி ஞானத்தை உணர்த்துகின்ருன். பிறப் பிற்குக் காரணம் இருவினைத் தொடக்கு அத்தொடக்கு உலகப் பொருள்களில் உயிர்வைக்கும் பற்றுதலால் உண்டாகிறது. ஆதலால் பற்று அறுதலே பிறப்பறுதற்கு வழியாகும். பற்று உயிர் அறிவில் நிகழ்வதால் பற்றறுதலும் உயிர் அறிவின் கண்ணேயே நிகழ்தல் வேண்டும். அப்பற்றறுதல் உலகப் பொருள்களின் நிலையாமையை உணர்தலால் உண்டாகும். அந்த நிலையாத உலகப்பொருள்கள் அறிவற்ற பொருள்கள் என்றும் காண வேண்டும். அவ்வுலகப் பொருள்களைத் தொழிற்படுத்துவது முதல்வனது சத்தி என்று உணரவேண்டும். அந்தச் சத்தியே உயிர்கட்கு உலகத்தைக் காட்டுகிறது, என்பதையும் உணர வேண்டும். பின் அச்சத்தியின் வடிவத்தைக் காணும் பொருட்டு, அச்சத்தியை மறைத்து நிற்கும். தோன்றி நின்று அழிகின்ற உலகப் பொருள்களை நீக்குதல் வேண்டும் அவற்றை நீங்கிய விடத்தில் உளதாய் நிற்பது ஞான வடிவம் என்று உணர்தல் வேண்டும்.

அவற்றை நீக்குதலாவது நிலைத்தலில்லாத இப்பொருள் வடிவங்கள் நிலைபெற்றிருக்கும் சத்தியின் வடிவல்ல என்று உயிர் தன் அறிவில் கண்டு கழித்தல். அங்ஙனம் கண்டு கழித்த விடத்து

உளதாய் நிற்கும் பொருள் முன் ஒரு காலும் பயின்று அறியாமையின் இன்னதென்று அறிய வாராத சூனியம் போலச் சுட்டறிவின் அளவினைக் கடந்து தோன்றும். பின்னர் அது சுட்டிறந்தறியும் உயிர் அறிவினால் உணரப்படும். ''அறிவினாலறிந்த யாவும்அசத்து ஆதல் அறிதி'' என்றார் சிவப்பிரகாச நூலாரும் உண்மையதிகாரம், 5ஆம் பாடலில், ''அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்து என்று காண, உளதாய் நிற்பது ஞானசொரூபம் என்று உணரற்பாற்று'' என்ற மெய்கண்டதேவர் திருவாக்கால் மேற் சொன்ன உண்மைகளை உணரலாம், பற்றுஅறுதலைத் துறவு என்று சொல்லுவர். துறவாவது நீக்குதலாம். சில சமயத்தார் பொருள்களின் நீங்குதலைத் துறவு என்பர். அங்ஙனம் பொருள்களின் நீங்குதல் உயிர்க்குச் செய்ய இயலாத ஒன்று. ஏனைப்பொருள்களை நீக்குதல் கூடும். உடம்பை நீக்குதல் இயலாது. தற்கொலை செய்து ஒருவாறு நீக்கினும் வேறு ஒரு உடம்பு உண்டாகும். அதனால் பிறப்பை நீக்குதல் முடியாது. சைவசமயத்தில் பற்றறுதலே துறத்தல் என்பர். உடம்போடு கூடிவாழும் பொழுதே உடம்பில் பற்றற்று உயிர்வாழுதல் கூடும். ஆதலால் பற்றறுதலாகிய துறவால் பிறவாமையை அடையலாம்.

---

## பாடம் 44.

## திருஐந்தெழுத்து.

### (சிவத்தை உணர்த்தும் குறி.)

மறைமொழி மந்திரங்கள், பாவனைமந்திரங்கள் என்று சொல்லப்படும் இருவகை மந்திரங்களுள் பாவனை மந்திரத்தில் ஒரு மந்திர வடிவம் உள்ளத்தில் பாவிக்கப்படும். அம்மந்திர வடிவத்தை உள்ளத்தில் தோற்றுவிக்க ஏற்ற சொற்களும் உச்சரிக்கப்படும். சொற்களெல்லாம் அவற்றுக்குரிய பொருள்களை உள்ளத்தில் குறிப்பன. (குறிகள்). ஆதலின், மந்திரவடிவத்தையும் அதற்குரிய சொற்கள் குறிக்க வல்லன. அச்சொல்லால் குறிக்கப்படும் பொருளை முன்கண்டறிந்த ஒருவனுக்கே அச்சொல் அங்ஙனம் உணர்த்த வல்லதாகும்.

மதுரையாகிய ஊரையும் அதைக் குறிக்கும் பெயராகிய மதுரை என்ற சொல்லையும், ஒருங்கு உணர்ந்தவனுக்கே மதுரை

என்ற சொல் அவ்வூரை அவனுள்ளத்தில் தோற்றுவிக்கவல்லது, ஊரை மட்டும் கண்டறிந்து அதற்கு உரிய பெயர் மதுரை என்பதை உணராதவனுக்கு அம்மதுரை என்னும் சொல் அவ்வூரை அவனுள்ளத்தில் தோற்றுவிக்காது.

ஆகவே பாவனைமந்திரம் கணிப்பவன், கணிக்கப்படும் மந்திர வடிவப்பொருளையும் 'அப்பொருளை உணர்த்தவல்ல சொல்லையும் அறிந்தவனுய் இருத்தல்வேண்டும். அத்தகையஒருவனுக்கேஅம் மந்திரம் பயன் தரவல்லது.

பாவனை மந்திரங்களில் கணிக்கப்படும் மந்திரவடிவம்சுட்டறிவினுல் அறிந்த பொருள்களின் வடிவம். சுட்டறிவின் அளவினைக் கடந்த முதல்வனை அவனருளால் ஞானிகள் தம் அறிவில் சுட்டிறந்தறிவர். அவ்வறிவை நிலைபெறச் செய்தற்கு அப்பொருளை உணர்த்தவல்ல திரு ஐந்தெழுத்தைத் தம் அறிவினுல் கணிப்பர். ஏனைச் சொற்கள் ஏனையோர்க்குச் சுட்டுப் பொருள்களை உள்ளகுதில் உணர்த்துமாறு போலத் திரு ஐந்தெழுத்து ஞானிகட்குச் சுட்டறிவுக் கெட்டா முதற் பொருளை உணர்த்திக் கொண்டிருக்கும். அவை உணர்த்தும் முறைமையாவது அவர்கள் சிவ் ஞானத்தைந் தம் அறிவில் கண்ட முறைமையாகவே இருக்கும்.

அதாவது உலகப்பொருள்கள் அறிவில்லாதபொருள்கள்; நிலைத்தலில்லாதன. அவற்றைத்தோற்றி, நிறுத்தி, அழிப்பது முதல்வனது அருட்சத்தி. அச்சத்தியே உயிர்க்கு அறிவிப்பது. உயிர் அறிவிக்க அறியும் பொருள், பளிங்கு போலச் சார்ந்ததன் வண்ணமாம் தன்மையது. உயிர் அறிவில் நிலையில்லாத உலகப் பொருள்களை நீக்கியவிடத்தில் உளதாய் நிற்பது ஞானவடிவம்; என்று இங்ஙனம் உணர்த்தும் முறைமையாகும்.

ஏனை மந்திரங்கள் உலகத்தோர்க்கு நிலையற்ற உலகப்பயன்களைத்தரவல்லது. இத்திரு ஐந்தெழுத்து ஞானிக்கு அழிவில்லாத வீடு பேற்றின்பத்தைத் தரவல்லது. ஆதலால் இதுமந்திரங்களுள் தலைமையானது. இதனை வடமொழியாளர் 'முத்தி பஞ்சாக்கரம்' எனபர்.

அவற்றுள் சிகாரம் முதற்பொருளாகிய சிவத்தை உணர்த்தும். வகாரம் வேண்டுவார்க்கு வேண்டுவதைத்தரவல்ல வண்மையாகிய அருட் சத்தியை உணர்த்தும். யகாரம் அச்சத்தியைச் சார்ந்து அறிவு, இச்சை, செயல்கள், விளக்கம் பெற்று இன்பம் நுகருகின்ற உயிரை உணர்த்தும். நகாரம் உயிரைப் பற்றியுள்ள

ஆணவம், மாயை, கன்மம், ஆகிய மூவகை மலங்களையும் தொழிற் படுத்துகின்ற மறைத்தற் சத்தியை உணர்த்தும். மகாரம் மும்மலங் களையும் உணர்த்தும்.

இத்திரு ஐந்தெழுத்தை இம்முறையே ஞானிகள் உச்சரித்து வீடுபேற்றின்பத்தில் நிலைத்திருப்பர்.

''நானேயோ தவம் செய்தேன்; சிவாயநம எனப்பெற்றேன்'.

— மாணிக்கவாசகர்.

---

## பாடம் 45.

## ஐந்தெழுத்து ஓதும் முறையில் அகப்பூசை.

ஞான நூல்தனை ஓதல், ஓதுவித்தல்; நற்பொருளைக் கேட்பித் தல், தான் கேட்டல், நன்குஆய் ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித் தல் ஆகிய ஐந்தும் இறைவன் அடி அடைவிக்கும் ஞான பூசை யாகும். இந்த ஞான பூசை செய்யும் முறையிலேயே சிவ ஞானி கள் திரு ஐந்தெழுத்தை ஓதுவர்.

அப்பொழுது அவர்கள் உடம்பை மாயையில் தோன்றிய தத்துவங்களின் தொகுதியாக மகரத்தை ஓதும் முறையில் காண்பர்.

அம்மாயா காரியத்தைத் தொழிற் படுத்துகின்ற இறை வனது மறைத்தல் சக்தியைக் குண்டலித்தானமாகிய (நாதம்) நாபி யினின்றும் தோன்றி எழுந்து விந்துத்தானமாகிய புருவநடுவினின் றும் ஒழுகும் நெய்யுடன் கூடி எரிகின்ற ஞான அனலாக நகாரத் தை ஓதும் முறையில் காண்பர்.

இதுவே ஞானிகள் அகத்தில் ஓமம் செய்யும் வழிபாடு. புறத் தில் உள்ள அனல் பசுவின் மலத்தில் உள்ள தீமைகளைச் சுட்டுத் தூய நீருக்குதல் போல இறைவனது சத்தியாகிய ஞானம் ஆன் மாவைப் பற்றியுள்ள மலத்தின் தீமைகளைப் போக்கித் தூய்மை செய்வதால், அச்சத்தியை ஞான அனல் என்று ஞானிகள் கருது வர்.

இதயத்தானத்தை முப்பத்தாறு தத்துவங்களாலமைந்த ஏரு தாமரை மலராகக் கண்டு அத்தாமரையின் மேல் சிவபெரு மான் அருட் சத்தியோடு விளங்குதலைச் சிகார வகாரங்களை ஓதும்

முறையில் காண்பர். காணுங்கால் உண்மை ஞானம் பெற்றதால் தங்களிடத்து உண்டாகிய கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறுமை, இரக்கம், அறிவு, மெய், தவம், அன்பு அகிய எட்டை யும் எட்டு மலராகக் கொண்டு பூசை செய்வர்.

ஆன்மா சார்ந்ததன் வண்ணமாம் தன்மையுடையது ஆக லின், முன்பு தாம் தத்துவங்களைச் சார்ந்து, தத்துவமாக விளங்கிய தையும் இப்பொழுது அவற்றின் நீங்கிச் சிவத்தைச் சார்ந்து சிவ மாக விளங்குதலையும் சிகார, வகார, யகாரங்களை ஓதும் முறையில், விந்துத்தானமாகிய புருவநடுவைத்தியானத் தானமாகக் கொண்டு காண்பார். இதுவே ஞானிகள் செய்யும் தியானமாகும்.

இங்ஙனம் ஞானிகள் ஓமம், பூசை, தியானம், ஆகிய அக வழிபாட்டைச் செய்து வருவதால் பழைய பயிற்சி பற்றி உண் டாகும் சுட்டுணர்வு அறவே நீங்கி, வியாபக அறிவைப் பெற்று சிவத்தை, ஞானிகள் கண்டு கொண்டேஇருப்பர்.

இங்ஙனம் அஞ்செழுத்து ஓதும் முறையால், அஞ்செழுத் தாகிய அந்த ஒரு குறியில் வைத்தன்றி முதல்வனைக் காணுதல் முடியாது. அவ்வாறு காணுமிடத்து முதல்வன் உயிரறி வில் விளங்கித் தோன்றுவான். தோன்றியவிடத்து ஆன்மா முதல்வனுக்குத்தான் அடிமையாதலை உணர்ந்து நிலைபெறும். ஆத லால் ஞானிகள் அஞ்செழுத்தை ஓதாமல் இரார்.

---

## பாடம் 46.

## ஓமம், பூசை, தியானம் ஆகியவற்றிற்கு உடம்பகத்தில் இடங்கள் அமைந்துள்ள முறை

''அண்டத்தில் உள்ளது பிண்டத்திலும் உண்டு'' என்பது ஆன்றோர் கண்டபழமொழி. 'இறைவன் செய்யும் ஐந்தொழில்களுள் மறைத்தலும் அருளலும் ஆன்மாவிடத்து நிகழ்வன. ஏனைப் படைத் தல், காத்தல், துடைத்தலாகிய மூன்றும் மாயையினிடத்தில் நிகழ் வன. மறைத்தலும் அருளலுமாகிய அறிவித்தல் தொழிலிரண்டும் உடம்பில் தலைப் பக்கத்தில் நிகழ்வன. இந்த அடையாளம் கண்டே புருவ நடுவைச் சிந்தித்தலாகிய தியானத்திற் கிடமாக அமைத்துள்ளனர்.

சிந்தித்தலுக்குச் சொற்களின் துணை வேண்டப்படும். சொற்கள் மாயையின் காரியம். அவை படைத்தல், காத்தல், துடைத்தலாகிய முத்தொழிற் படுவன. அவை உந்தியினின்றும் தோன்றுவதாக ஆன்றோர் கண்டனர். அவ்வுண்மையை, எழுத்துக்கள் பிறக்கு மாற்றை உணர்த்த எழுந்த ''உந்தி முதலா'' என்று தொடங்கும் தொல் காப்பியச் சூத்திரத்தால் உணரலாம். இல்லது உண்டாகாது ஆகலின் சொற்களுக்கு முதற்காரணமாகிய குண்டலி என்று சொல்லப்படும் சுத்த மாயைக்கு இடமாக உந்தியை அமைத்தனர்.

இச்சொற்கள் தோன்றி நின்று உயிர் அறிவில் விளக்கீடாக இன்ப துன்பப் பயன்களை நுகர்வித்து, அந்நுகர்ச்சியின் பயனாக அறியாமையைப் போக்கி அறிவை விளக்குகின்றன.

சொற்கள் அறிவில்லாத பொருள்கள். ஆகையால் தாமே முத்தொழிற் படா. அவற்றைத் தொழிற்படுத்த அவற்றோடு ஓர் அறிவுச்சத்தி விரவியிருத்தல் வேண்டப்படும். அச்சத்தி முதல்வனது சத்தியே. அச்சத்தி தோன்றி, நிறுத்தி, ஈற்றில் அழித்து விடுதலாலும், உயிரைப் பற்றியுள்ள மலத்தின் வலியை அழித்து உயிர்க்கு அறிவை விளங்குதலாலும், அச்சத்தியை ஞான அனலாக உருவகம் செய்தனர்.

அந்த ஞானமானது உயிர் இருவினைப் பயன்களை நுகர்தல் வாயிலாக விளக்கமுற்று வருதலால் தியானத்தானமாகிய புருவ நடுவிலிருந்து ஞான அனலை வளர்க்கும் அமிழ்தமாகிய நெய் ஒழுகுவதாகப் பாவித்தனர்.

சொற்களின் தொகுதி பிரணவமாகிய ''ஓம்'' ஆதலால், அச் சொற்களைத் தொழிற்படுத்தும் சத்தியாகிய ஞான அனலை ஓமத்தீ என வழங்கினர். ஆகவே உடம்பகத்தில் ஓமம் செய்தலாகிய வழிபாட்டிற்கு உந்தியை இடமாக அமைத்தனர்.

படைத்தல், காத்தல், துடைத்தலாகிய முத்தொழில்களுள் துடைத்தல் என்பது அழுக்கைப் போக்குதலாம். உடம்பகத்து இரத்தத்திலுள்ள அழுக்கெல்லாம் மார்பின் கண்ணே அமைந்துள்ள மூச்சுப்பையில் சுட்டெரிக்கப்படுகிறது. இரத்தம் தூய்மை அடைகிறது. ஆகலால் மார்பாகிய நெஞ்சைத் துடைத்தற் சத்திக்கு இடமாக அமைத்தனர்.

மாயையின் காரியமாகிய தத்துவங்களுக்கு அப்பாற்பட்ட சிவ வழிபாட்டுக்கும் அவ்விடத்தையே (மார்பாகிய நெஞ்சையே இடமாக) அமைத்துள்ளனர்.

# பாடம் 47.

## உடம்பை இறைவன் உடைமையாகக் காணும் பயிற்சி

உயிர் உடம்போடு இரண்டறக் கலந்து உடம்பேயாய் நின்று வருவது. ஆகவே அவ்வுடம்பு தான் அல்ல; இறைவன் உடைமை; என்ற உணர்வில் நிலைத்தற் பொருட்டு ஆன்றோர் சில பயிற்சிகளை அடிக்கடி செய்வர்.

உயிர் உடம்பின் வேறு என்றும், உடம்பு இறைவன் உடைமை என்றும் ஆன்றோர் ஆராய்ந்து கண்டனர். அவ்வுணர்வு நிலை பெறுதற்பொருட்டு உடம்பின் கண் நிகழும் தொழில்களை நினைப்பூட்டிக்கொள்வர்.

உடம்பிற்காணப்படும்தொழில்கள் ஐந்து. அவை படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பன. மறைத்தலும் அருளலும் உயிர்க்கு அறிவூட்டுதல், படைத்தல், காத்தல், அழித்தல், மூன்றும் மாயா காரியங்களைத் தொழிற்படுத்துதல். அறிவூட்டு கின்ற தொழில்களாகிய மறைத்தலும், அருளலும், தலையின் கண் நிகழக்காணுகிறோம். வினைப்பயனாகிய இன்பதுன்பங்களை ஊட்டு தல் மறைத்தலாகும். அதன் வாயிலாக நல்லறிவை உயிர்க்கு உண் டாக்குதல் அருளலாகும். ஏனை மூன்று தொழில்களில் படைத்தலை எல்லா உறுப்புகளிலும் காணுகிறோம். உடம்பில் எந்தப்பாகத்தி லாவது தோலில் கேடு ஏற்பட்டால் சில நாட்களில் புதிய தோல் உண்டாவதைக் காண்கிறோம். அதுவே படைத்தல் தொழில்; உடம் பில் உள்ள எல்லா உறுப்பும் வலுவோடு நிலைத்திருப்பது நாம் உண்ணும் உணவாலேயாம். உணவு உட்கொள்ளவில்லையானல் உடம்பில் வலிகுன்றி உடம்பு கெட்டுப்போவதைக் காணுகிறோம் நாம் உண்ணும் உணவைக்கொண்டு உடம்பிலுள்ள எல்லா உறுப்பு களையும் நிலைபெறச் செய்தலே காத்தல் தொழிலாம். நாம் உட் கொள்ளும் காற்று இரத்தத்திலுள்ள அழுக்கை எரித்துத் தூய் மைப்படுத்துகிறது. உட்கொள்ளும் காற்றைக்கொண்டு அழுக்கை எரித்தலே அழித்தல் தொழிலாம்.

இத்தகைய முத்தொழிலால் உடம்பை நிலைபெறச்செய் வது உயிரால் செய்யக்கூடியது அல்ல. முதல்வனது அருட் சத்தியே அத்தொழில்களை நிகழ்த்துகிறது. அச்சத்தியே உயிர்க்கு அறிவூட்டும் தொழிலையும் நிகழ்த்துகிறது. முதல்வனு டைய சத்தி ஒன்றே ஐந்தாகப் பிரிந்து ஐந்தொழிலையும் செய்கின்

றது என்பதை நினைப்பூட்டக் கையிலுள்ள ஐந்து விரல்களைத் தொடுதல் வாயிலாக நினைப்பூட்டுவர். பெருவிரலைத் தொட்டு அருளல் தொழில் செய்யும் சத்தியையும், சுட்டுவிரலைத் தொட்டு மறைத்தல் தொழில் செய்யும் சத்தியையும், நடுவிரலைத் தொட்டு அழித்தல் தொழில் செய்யும் சத்தியையும், அணிவிரலைத் தொட்டு காத்தல் தொழில் செய்யும் சத்தியையும் சுண்டுவிரலைத் தொட்டுப் படைத்தல் தொழில் செய்யும் சத்தியையும் நினைப்பூட்டிக் கொள்வர். பின்னர் பெருவிரலால் தலை உச்சியையும், சுட்டுவிரலால் முகத்தையும், தொடுதலால் உயிருக்கு அறிவு ஊட்டும் தொழில்களாகிய அருளல் மறைத்தல், தொழில்களை நினைப்பூட்டிக் கொள்வர். நடுவிரலால் மார்பையும் அணிவிரலால் நாபியையும் சுண்டு விரலால் கால், கை முதலிய உறுப்புகளையும் தொட்டு அழித்தல், காத்தல், படைத்தல்களாகிய மூன்று தொழில்களையும் நினைப்பூட்டிக் கொள்வர். அவ்வாற்றால் உடம்பு இறைவன் உடைமை என்னும் உணர்வில் நிலைபெறுவர்.

---

## பாடம் 48.

## மெய்யுணர்வுடையோர் முதல்வனோடு ஒன்றி நிற்பர்

ஒன்றி நிற்றலாவது. இரண்டு பொருள்கள் கலப்பினால் ஒன்றேயாய் நிற்றல். முதல்வன் எல்லா உயிர்களோடும் கலப்பினால் அவ்வுயிர்களேயாகித், தான் வேறு காணப்படாது நிற்கிறான்

சூரியனுடைய ஒளி சந்திரனோடு உடனாய் நின்று அதனை விளக்குகின்றது அப்பொழுது தான் வேறு காணப்படாது அச்சந்திரனேயாய் நிற்கிறது. அவ்வாறே முதல்வனும் தம்மோடு ஒன்றி நிற்றலை மெய்யுணர்வுடையோர் தம் அறிவில் காண்கின்றனர். சந்திரன் தனக்கென ஒளியில்லாதது ஆயினும் சூரிய ஒளியுடன் கூடிநின்று ஒளியுடையதாக விளங்குகிறது. அதுபோல உயிர்களும் தமக்கென அறிவில்லாதன, ஆயினும் முதல்வன் அருளோடு உடனாய் நின்று அறிவுடையனவாக விளங்குகின்றன சந்திரனில் காணப்படும் ஒளி உண்மையால் நோக்குவார்க்குச் சூரிய ஒளி என்பது தெளிவாகப் புலப்படும். அதுபோல் உயிர்களிடத்து விளங்கும் அறிவானது உண்மையால் நோக்குவார்க்கு முதல்வன் அருளே என்பது தெளிவாகப் புலப்படும். அங்ஙனம்

கண்ட மெய்யுணர்வுடையோர் தம்மை வேறு காண்டற்குத் தமக்கென ஓர் அறிவு இல்லாமையால் தம்மை வேறு காணது இறைவன் அருளில் அடங்கி நின்று அவ்விறைவனேயாய்க் கண்டு நிற்பர். இங்ஙனம் தன்னைப் புகலாக அடைந்த அம்மெய்யுணர்வு உடையோரை முதல்வனும் தன் அருள் வியாபகத்தில் தங்கி நிற்கச் செய்து தானேயாய்க் காணப்பட்டு நிற்பன். இங்ஙனம் அடங்கி நிற்கும் ஞானத்தையே இறைவனேடு ஒன்றிநிற்கும் ஞானம் என்பர். இந்த ஞானத்தால் இது காறும் உயிரைப் பற்றியிருந்த "யான்" "எனது" என்னும் செருக்கு அறும். செருக்கு உள்ள வரையில் முதல்வன் தான் வேறு காணப்படாது உயிரேயாய் நிற்பன். செருக்கு அற்ற காலத்தில் உயிர்வேறு காணப்படாதபடி அருள் வியாபகத்துள் உயிரை அடங்கி நிற்கச் செய்து முழுவதும் தானேயாய் முதல்வன் விளங்கி நிற்பன். இங்ஙனம் ஒன்றி நிற்கும் ஞானமுடையார் செருக்கு அறவே நீங்கப் பெற்றமையால் பேரின்பம் நுகர்தற்கு உரியவர் ஆவர்.

ஒன்றியிருந்து நினைமின்கள்
உம்தமக்கு ஊனமில்லை
கன்றிய காலனைக் காலால்
கடிந்தான் அடியவர்க்கா
சென்று தொழுமின்கள் தில்லையுள்
சிற்றம்பலத்து நட்டம்
என்றுவந்தாய் என்னும் எம்
பெருமான்தன் திருக்குறிப்பே

என்பது திருநாவுக்கரசர் தேவாரம். அதனுள் ஒன்றியிருந்து நினைமின்கள் என்பது இறைவனேடு ஒன்றி நிற்கும் ஞானத்தை உணர்த்துகிறது. ஊனமில்லை என்பது "யான்" "எனது" என்னும் செருக்கறுதலை உணர்த்துகிறது, ஒன்றிநிற்கும் ஞானத்தை ஏகனய் நிற்கும் ஞானம் என்றும் சொல்வார்கள்.

---

## பாடம் 49.

## மெய்யுணர்வுடையோர் இறைபணியில் வழுவாது நிற்பர்

ஆன்மா பளிங்குபோலச் சார்ந்தன் வண்ணமாம் இயல்புடையது. அவ்வுண்மையை உணர்ந்தோர் தம்மை வேறு காணது தம்மில் சிவத்தைக்கண்டு, அச்சிவத்தோடு ஒன்றி நிற்பர்.

பின்னர், தம் அறிவு, இச்சை, செயல்கள் முதல்வன் அருள் உடன் நின்று செலுத்துதலால் விளக்க முறுதலும், உடன் நின்று செலுத்தாவிடில் விளக்கமுறுமையும் ஆகிய உண்மையைக் காண்கின்றனர். ஆகவே தம்மிடத்து நிகழும் அறிவு, இச்சை செயல்களை உடன் நின்று செலுத்தும் முதல்வனது அருட் செயலாகக் காண்கின்றனர். அங்ஙனம் காணுதலால் அவர்கள் வினைத்தொடக்கின் நீங்குகின்றனர். மெய்யுணர் வுடையோர் தம் அறிவு, இச்சை, செயல்கள் தொழிற்படுங்காலத்து முதல்வன் அருளையே காண்கின்றனர்

எவ்வாறெனில், ''செவி, வாய், முதலிய பொருள்கள் மாயையினின்றும் முதல்வனால் தோற்றி நிறுத்தி, அழிக்கப் படுபவை ஆகவே அவை அவனுடைய உடைமை. அவன் அருளாலேயே தொழிற்படுகின்றன. நம்மால் தொழிற்படுவன அல்ல, அவற்றுக்கு நிலைக்களமாகிய உடம்பு முதலியனவும் மாயையின் காரியங்களே. அவைகளும் அவன் உடைமையே. அவனால்தொழிற் படுவனவே நம்மால் தொழிற்படுவன அல்ல. அவற்றோடு கூடி வினைகளை ஈட்டிநுகர்ந்து வருகிறநாமும் அவனுடைய உடைமையே. நாம் அறிவு, இச்சை செயல்களை அவன் விளக்கிய வழி விளங்கப் பெறுகிறோம். அல்லாதவிடத்துப் பெறவில்லை. இவ்வாறு முதல்வனை இன்றி அமையுமாறு இல்லாமையால், நாமும் அவனது உடைமை யாவோம்,'' என்று இங்ஙனம் பசு பாசங்களின் இயல்புகளை உள்ளவாறு உணருமாற்றால் அருளையே காண்கின்றனர்.

இங்ஙனம் முதல்வன் அருளை உணர்ந்து அவ்வருளின் வழி நின்று செய்யும் செயல்களே இறைபணியாம்.

இவ்விறைபணி செய்வார்க்கு நாம் செய்கின்றோம் என்கின்ற முனைப்பு இல்லாமையால், இவர்கட்கு வினை ஏறுவது இல்லை; பழைய வினைப்பயன் இவர் கட்கு விளையும் காலத்திலும், இவர்கள் முதல்வன் அருளையே கண்டு கொண்டிருப்பர். ஆகையால் அப்பழ வினைப்பயனால் அவர்கள் தாக்குறுதலும் இல்லை. அப் பழவினை உடலளவில் தாக்கி ஒழிகின்றது. பழக்கம் காரணமாக ஒரு வேளை மெய்யுணர்வுடையோரைத் தாக்கினாலும், அவர்கள் உடனே மெய்யுணர்வாகிய அருளைச்சார்ந்து நிற்பர்; ஆகவே அத் தாக்குதல் வினை ஏறுதற்குரிய வலிமையுடையதாகாமல் மெலிதாய்க் கெட்டொழியும்.

சூரிய வெளிச்சத்திலுள்ள கண்ணுக்குச் சிறிய விளக்கொளி விளக்க முறாததுபோல, அருளோடுகூடி நிலையான பேரின்பம் நுகர்ந்தவர்க்கு, வினைப்பயனாகிய சிற்றின்பம் ஒரு இன்பமாக விளக்க முறாது; ஆதலால் அவர்கள் சிற்றின்பத்தில் அழுந்துவதில்லை

---

## பாடம் 50

# ஆன்மா அறிவனவற்றை முதல்வனும் உடன்நின்று அறிகிறான்

ஒருவன் தன் நண்பனுடைய மணவிழாவைக் கண்டு இன்புறு தற்கு இன்றியமையாத ஆடை அணிகளோடும் இன்றியமையாத துணைவர்களோடும் செல்கிறான். அவனுடன் சென்ற ஆடை அணி முதலிய பொருள்கள் அறிவில்லன: ஆகலின் அவை விழாவைக் காணுதல் செய்யா. அவனுடன் சென்ற துணைவர்கள் அறிவுள்ள வர்கள்: ஆகலின் அவர்களும் அவனுடன் அவ்விழாவைக்கண்டு இன்புறுவார்கள். ஆனால் நண்பன் இன்புறுதற்கும் அவனுடன் சென்ற துணைவர் இன்புறுதற்கும் சிறிது வேறுபாடு உண்டு.

ஆன்மாக்கள் தமக்கென அறிவில்லாதன. அவை அறிவு வடிவமான முதல்வன் அருளைச் சார்ந்து சார்ந்ததன் வண்ணமாய் நின்று அறிவு விளக்கம் பெறுவன ஆகவே ஆன்மாக்கள் அருளை இன்றியமையுமாறு இல்லை. ஆதலால் ஆன்மாக்கள் அருளோடு உடனாய் நின்றே பேரின்பம் நுகர்கின்றன. முதல்வன் அருள் அறிவு வடிவமாதலின் ஆன்மாக்கள் அறிந்து அனுபவிக்கின்ற வினைப்பயனாகிய இன்ப துன்பங்களையும் பேரின்பத்தையும் உடன் நின்று அறிகிறது ஆனால் ஆன்மாக்கள் அவற்றில் அழுந்து கின்றன. முதல்வன் அருள் அழுந்தாது உணர்கின்றது. அழுந்து தலாவது ஒன்றை அறியுங்காலத்து வேறு ஒன்றனையும் அறியாது இருந்தல். ஆன்மாக்களின் தன்மை அழுந்தி அறிதலே ஆகும். ஆதலால் அவை ஒன்றை அறியும்போது வேறு ஒன்றனையும் அறியா. ஒன்றொன்றாகவே அறியும். முதல்வன் அருள் அழுந்தாது அறியும் தன்மை உடையது. ஆதலால் அது ஒரே காலத்தில் எல்லாப் பொருள்களையும் ஒருங்கே உணர்ந்து நிற்கும். இங்ஙனம் ஆன்மாக்கள் அறிதற்கு முதல்வன் அருளும் உடனாய் நின்றறிதல் இன்றியமையாததாய் இருக்கிறது. இவ்வாறு ஆன்மாக்கள் அறியுமாறு அவற்றோடு உடனாய் நின்று முதல்வன் அருள் உணர்ந்து வருதலை முதல்வனுடைய காணும் உபகாரம் என்பர்.

திருமாளிகைத் தேவர் இவ்வாறு முதல்வன் செய்யும் காணும் உபகாரத்தை கண்டு தாம் பாடிய திருவிசைப்பாவில் முதல்வனை நோக்கி.

''தொண்டனேன் நினையுமா நினையே''

என்று அருளிச் செய்வாராயினர்.

திருநாவுக்கரசு நாயனாரும்

''கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க்
காலத்தைக் கழித்துப் போக்கி
தெள்ளியே ஆகிநின்று
தேடினேன் நாடிக்கண்டேன்
உள்குவார் உள்கிற் றெல்லாம்
உடனிருந்தறிதி என்று
வெள்கினேன் வெள்கி நானும்
விலாவிறச் சிரித்திட்டேனே''

என்னும் தேவாரத்துள் ''உள்குவார் உள்கிற்றெல்லாம் உடன் இருந்தறிதி என்று நாடிக்கண்டேன்'. என்றது முதல்வன் செய்யும் காணும் உபகாரத்தைத் தாம் கண்டதை யேயாம்.

---

## பாடம் 51.

## அறிஞர் அருளை மறவாது அன்பு செய்து அழியாத இன்பம் அடைகின்றனர்

முதல்வன் உயிர்களோடு இரண்டறக்கலந்து உடனாய் நின்று காட்டியும் கண்டும் உபகரித்து வருகிற தன்மையை அறிஞர்கள் அருட்கண்ணாய் காண்கின்றனர். காணவே இங்ஙனம் முதல்வன் செய்துவருதல் ஆன்மாவைத்தான் திருவடிக்கண் சேர்த்துக்கொள்ளுதற்கு உளதாகிய இச்சை மிகுதியே காரணம் என்பதையும் உணருகிறார்கள். அச்செயல் தொடக்கமின்றி நடந்து வருதலையும் அறிகிறார்கள். ஆன்மாக்கள் படிமுறையில் அறிவிக்க அறியும் தன்மை உடையன. ஆகலான் அப் படிமுறையிலேயே சிறிது சிறிதாக அறிவை விளக்கி வளர்த்து வருகின்ற உண்மையையும் உணர்கின்றனர். இங்ஙனம் முதல்வன் சலியாது செய்து வரும் தொழிலுக்குக் காரணமாகிய அருளை எண்ணுந்தோறும் முதல்வனிடத்து அன்பு மீதூரப் பெறுகின்றனர். இவ்வாறு ஆன்மாவினிடத்து அன்பை வளரச்செய்வது முதல்வனது அருளேயாகும்.

இங்ஙனம் அன்பு மீதூரப் பெற்ற அறிஞர் இறைவன் திருவடியில் இரண்டறக்கலத்தற்கு உரியவர் ஆகின்றனர். அப்பொழுது முதல்வன் அவ் வறிஞர்களுடைய வினையின் நீங்கி விளங்கிய விரிந்த அறிவில் தன் இயல்புமுழுவதையும் விளங்கச்செய்து, தன்

ளோடு இரண்டறக் கலந்திருக்குமாறு செய்கிறான். இங்ஙனம் பக்குவமுடைய உயிர்களைத் தன் திருவடிக்கண் சேர்த்து தன் வசமாய்ப்பற்றிக்கொண்டு நிற்கும்படிச் செய்தல் காந்தக்கல் இரும்பைத் தன்கண் இழுத்துக்கொண்டு தன் வசமாய்ப் பற்றச்செய்தல் போல் வதாம். இங்ஙனம் முதல்வன் செய்வதும் தன் அருட் சத்தியாலேதான்.

சிவப்பேற்றை அடைந்த ஆன்மா முதல்வன் அருளால் அல்லது ஒன்றையும் செய்யாமல் பிரிப்பின்றி எப்போதும் தன்னோடு இயைந்து நிற்கும் முதல்வன் திருவடியை அறிந்து அம்முதல்வனிடத்து இச்சை மீதூருதலாகிய அன்பு செய்து முதல்வனோடு இரண்டறக் கலந்து அழிவில்லாத இன்பம் நுகர்தலாகிய வழிபாட்டைச் செய்து கொண்டிருக்கும்.

இந்நிலை உடம்பு நீங்கியபின் உள்ள உயிர்கள் அடைதற்கு உரியநிலை. சீவன் முத்தர்கள் உடம்பு உள்ளபொழுதே அந்த நிலையை அடைந்து விடுவர். முதல்வன் உயிர்களோடு இரண்டறக் கலந்து உடன் நின்று கொண்டு யார் யார் யாது செய்கின்றனர் என்று அறிந்து அவரவர்க்கு அவ்வச்செய்திக்குத்தக்க பயனை அவ்வப்போதே விளைவித்து வருகின்றான். ஆதலால் அன்பு மீதூரப் பெற்ற பக்குவ ஆன்மாக்களை உடம்பில் நிலைபெற்றுள்ள பொழுதே தன் திருவடியில் இரண்டறக்கலக்கச் செய்து அழியாத இன்பத்துள் அழுத்துகின்றான்.

> ''வெம்மை நமன்தமர்மிக்கு விரவி விழுப்பதன் முன்
> இம்மை உன்தாள் என்றன் நெஞ்சத்து எழுதிவை ஈங்கிகழின்
> அம்மை அடியேற்கு அருளுதி என்பது இங்கு ஆர் அறிவார்
> செம்மைதரு சத்தி முற்றத்து உறையும் சிவக் கொழுந்தே''

என்ற தேவாரத்துள் திருநாவுக்கரசர் இம்மையிலேயே பரமுத்தியை அருளுமாறு வேண்டுகிறார் ''நனைந்தனைய திருவடி என் தலைமேல் வைத்தார்'' என்று அவர் பாடிய திருத்தாண்டகத் தால் பேரின்பம் பெற்றமையைத் தெளியலாம்.

## பாடம் 52.

## சீவன் முத்தர் மும்மல அழுக்கை ஞான நீரால் கழுவுவர்

சீவன் முத்தர்கள் உடம்பு உள்ள பொழுதே இறைவன் திருவடியை அடைந்து இரண்டறக்கலந்து பேரின்பம் நுகர்பவர். உடம்பு முகந்து கொண்டு வந்த பிராரத்தவினை தம் பயனைத்தந்தே கழியும். பேரின்பத்தில் அழுந்தி நிற்கின்ற முத்தர்க்கு அவ்வினைப் பயன்கள் உடல் ஊழாய்க்கழியும். அம்முத்தர்களைத் தாக்காது. சிலவேளைகளில் பழைய பயிற்சி காரணமாக முத்தர்களின் அறிவில் வினைப்பயன்கள் தாக்குதலும் கூடும். அப்பொழுது விருப்பு வெறுப்புக்கள் உளவாகும். அவ்விருப்பு வெறுப்புக்கள் மேல் வினை ஏறுவதற்கு வித்தாவன. ஆதலால் மேலைக்கு வினை ஏருதபடி உடனுக்குடன் அவற்றை ஞானத்தால் நீக்கி விடுவர். உடனே அவற்றைக் களையாவிடில் அவை வளர்ந்து பிறவிக்கு வித்தாய் விடும்.

ஆதலால் சீவன் முத்தர்கள் விருப்பு வெறுப்புக்கள் தோன்றியவுடனே, அவை உண்டாதற்குக் காரணம் பிராரத்தவினை தம் அறிவில் தாக்கினமை என்றும், அவை தாக்குதற்குக் காரணம் அருளை மறந்து அறிவு புறத்தில் மாயா காரியங்களில் சென்றமை என்றும், அங்ஙனம் அருளை மறந்தமைக்குக் காரணம் அறிவை மறைப்பிக்கும் ஆணவ மலம் என்றும், ஆராய்ந்து அவற்றின் நீங்கி அறிவைத் தலைப்படுவர்.

இவ்வாறு மும் மல அழுக்கைச் சீவன் முத்தர் உடனுக்குடன் ஞான நீரால் கழுவி வருவர். மும் மலங்களாவன ஆணவம், மாயை, கன்மம் என்பன. அவை மூன்றும் மின்சாரம் முதலியன போல நம் சுட்டறிவுக்குப் புலனாகாதவை. மின்சாரமானது நம் சுட்டறிவுக்குப் புலனாகாத ஒரு பொருள். ஆயினும் அது செய்யும் காரியங்களால் மின்சாரம் என்ற ஒரு பொருள் உண்டு என்று கருதலளவையால் அறிகிறோம். கருதலளவையால் உண்டெனத் துணிந்த அம் மின்சாரத்தைப் பலகருவிகளின் வாயிலாகப் பற்பல பொருள்களில் தொகுத்து வைத்துப் பல காரிய நிகழ்ச்சிக்குப் பயன்படுத்தி வருவதை யாவரும் அறிவர். அவ்வாறே மூன்று மலங்களும் உள என்ற உண்மையை அவை செய்துவரும் காரியங்களால் ஆன்றோர்கள் கண்டனர். கண்டு அவற்றை உலகியலில் பல காரியங்கட்குப் பயன்படுத்தி வந்தனர். அங்ஙனம் அவர்கள் பயன்படுத்

திய முறைகளே ஒழுக்க நூல்கள், மந்திர நூல்கள் மருந்து நூல்கள் முதலியன ஆகும். ஒழுக்க நூல்களால் உலகின் துன்பமின்றி இன்ப மாக வாழ வழிகள் வகுத்தனர். மந்திர நூல்களாலும், மருந்து நூல்களாலும் மனநோய், உடல்நோய் முதலியவற்றைப் போக்கு தற்கு உரிய முறைகளைக் காட்டினர்.

இம் மும்மலங்களின் காரியம் நிலையாத உலகியல் சிற்றின் பமே. ஆகலின், அழியாத பேரின்பத்தை விரும்பும் முத்தர்கள், இவற்றில் தங்கள் அறிவைச் செலுத்தாமல் அருளை நாடி நிற்பர். அன்னார் தங்கள் அறிவு மும்மல காரியங்களில் சென்றால் உடனே அவற்றை நீக்கி அருளைத் தலைப்படுவர்.

---

## பாடம் 53.

## சீவன் முத்தர்கள் சிவபக்தர்களோடு இணங்கி வாழ்வர்

''கற்றாரைக் கற்றாரே காமுறுவர்—கற்பிலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர்''—என்பது

ஆன்றோர் அருளிய முதுமொழி. கற்றவர்கள் போக்கும் கல்லாதார் போக்கும் ஒன்றுக் கொன்று மாறுபட்டிருப்பதால் கற்றவர் கல்லாதாரோடு இணங்கி வாழ்தலும் கல்லாதார் கற்ற வர்களோடு இணங்கி வாழ்தலும் முடியாதாம்.

அதுபோல சீவன் முத்தர்களுடைய வாழ்க்கையும் அல்லா தார் வாழ்க்கையும் ஒன்றுக் கொன்று முரண்பாடுடையன. சீவன் முத்தர்கள் வீட்டியலை விரும்பி ஒழுகுபவர்கள். அல்லாதார் உலகி யலை விரும்பி ஒழுகுபவர்கள். சீவன் முத்தர்கள் ஆணவம், மாயை கன்மம் ஆகிய மும்மல அழுக்கை ஞான நீரால் கழுவித் தூய வாழ்க்கையை நடத்துபவர்.

சீவன் முத்தர்கள், அல்லாதாரோடு இணங்கி வாழ்ந்தால் அவர்கள் உலகியற் செய்திகளையே உணர்த்தி மெய்ப்பொருளா கிய சிவத்தை மறக்கும்படிச் செய்வர். ஆதலால் சீவன் முத்தர் அத்தகையாரது இணக்கத்தை விட்டு ஒழித்தற் பொருட்டுச் சிவ பக்தர்களோடு இணங்கி வாழ்வர். சிவபக்தர்கள் என்பவர், மும் மல அழுக்கை ஞான நீரால் கழுவிச் சிவபெருமானிடத்து அன்பு செலுத்திப் பேரின்பம் நுகரும் சீவன் முத்தர்களே. அச் சிவபக்தர் களுடைய போக்கும் சீவன் முத்தர்களுடைய போக்கும் ஒரே படித்தாய் இருத்தலால் சீவன் முத்தன் சிவனை மறவாது அன்பு

செய்து பேரின்ப வாழ்க்கையை நடத்துதல் கூடும். அவர்கள் பேச்சு செயல் எல்லாம் சிவ வழிபாடு பற்றியதாகவே இருக்கும். உலகியல் பற்றியதாய் இராது.

ஒருவன் தன் மனைவியினிடத்து உள்ளன்புடையவனாயின் அவளுடைய உறவினரிடத்தும் அன்புடையவனாய் ஒழுகுவான், அங்ஙனம் அவன் உறவினரிடத்தில் காட்டும் அன்பின் அளவு பற்றியே அவன் மனையாளிடத்துக் கொண்ட அன்பின் அளவு துணியப்படும். அதுபோலச் சிவபெருமானிடத்து உள்ளன்புடைய ஒருவன் சிவபக்தர்களிடத்தும் அன்புடையவனாய் ஒழுகுவான். பக்தர்களிடத்தில் அவன் காட்டும் அன்பின் அளவுபற்றியே சிவ பெருமானிடத்து அவன் வைத்துள்ள அன்பு துணியப்படும். ஆதலால் சிவனடியாரிடத்து அன்பு இல்லாதவர்கள் சிவபெருமானிடத்தும் அன்பு இல்லாதவரேயாவர்.

சிவ பக்தர் அல்லாதார் அஞ்ஞானத்தை உணர்த்துவர் என்ற உண்மையை

''தெய்வம் என்பதோர் சித்த முண்டாகி
முனிவிலாததோர் பொருளது கருதலும்
ஆறுகோடி மாயா சத்திகள்
வேறு வேறு தம் மாயைகள் தொடங்கின
ஆத்தம் ஆனார் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்
சுற்றம் என்னும் தொல் பசுக்குழாங்கள்
பற்றியழைத்துப் பதறினர் பெருகவும்
விரதமே பரமாக வேதியரும்
சரதமாகவே சாத்திரம் காட்டினர்
சமயவாதிகள் தத்தம் மதங்களே
அமைவதாக அரற்றி மலைந்தனர்''

என்னும் திருவாசக அடிகளால் உணரலாம்.

## பாடம் 54.

## சீவன் முத்தர்கள் சிவபக்தர்களது திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவன் எனவே கண்டு வழிபடுவர்

சீவன் முத்தர் மும்மல அழுக்கை ஞான நீரால் கழுவுவர் என்றமையால் அவர் அறிவு தொழிற்படுமாறு தெரிந்து கொண்டோம். அவர்கள் சிவபக்தர்களை விரும்பிச் சேர்ந்து வாழ்வர் என்றமையால் அவர் இச்சைதொழிற்படுமாறு தெரிந்தோம். இனி அவர் செயல் தொழிற்படுமாற்றை அறிதல் வேண்டும்.

சிவபக்தரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவனெனவே கண்டு வழி படுதலே அவர்கள் செயல் புறத்தில் தொழிற்படுமாறு, திருவேடமென்பது சிவபக்தர்களது திருவுருவம். சிவாலயமென்பது சிவன் கோவில்களிலுள்ள திருவுருவங்கள். கோவிலிலுள்ள திருவுருவங்கள் மனம் வாக்குகட்கு எட்டாத கடவுட் பொருளை அறிவிற்காண உணர்த்தும் குறிகளாம் அவற்றைக் கண்டதும் சீவன் முத்தர்களுடைய அறிவிற் கடவுட் காட்சி நிகழ்ந்து அன்பு மீதூரப் பெறுவர். இங்ஙனம் அத் திருவுருவங்களில் தயிரில் நெய்போல முதல்வன் வெளிப்பட்டுத் தோன்றலால் அவற்றைச் சிவனெனவே கண்டு வழிபடுவர். இனிச் சிவபக்தர்கள் யான், எனது என்னும் செருக்கற்றுச் சிவத்தோடு இரண்டறக் கலந்து சிவமேயாய் நிற்பர். அவர்கள் திருவுருவத்தைச் சீவன் முத்தர்கள் காணும் காலத்தும் தங்கள் அறிவில் கடவுட் காட்சி பெற்று அன்பு மீதூரப் பெறுவர். இவ் விடத்தும் இறைவன் வெளிப்பட்டுத் தோன்றுதலால் இவ்விடத் தும் வழிபாடுகளைச் செய்வர். திருவுருவத்தில் இறைவனை வெளிப் படக் கண்டு சீவன் முத்தர்கள் வழிபாடு செய்வதைத் திருஞான சம்பந்தர் வரலாற்றில் காணலாம். ஞானசம்பந்தர் சிதம்பரம் சென்று கூத்தர் திருவுருவத்தைக் கண்டதும் தம் அறிவில் சிவ பெருமான் தமக்களித்த மெய்ஞ் ஞானத்தையும் அந்த ஞானத்து எழுந்த ஒரு பேரின்பத்தையும் அடைந்தார், அடையவே அதற்கு ஏதுவாயிருந்த அத் திருவுருவத்தை அரனெனவே கண்டு வழிபாடு ஆற்றினர். இவ்வுண்மையை அடியில் வரும் திருத் தொண்டர் புராணச் செய்யுளால் அறியலாம்.

''அண்ணலார் தமக்கு அளித்த மெய் ஞானமே
யானவம் பலவுமுந்த
முண்ணிறைந்தஞானத் தெழுமானந்த
வொரு பெருந் தனிக் கூத்துங்
கண்ணின் முன்புறக் கண்டு கும்பிட்டெழுந்து
களிப் பொடுங் கடற்காழிப்
புண்ணியக் கொழுந்தனையவர் போற்றுவார்
புனிதராடிய பொற்பு''
''உணர்வினோர் பெறவருஞ் சிவபோகத்தை
யொழிவின்றி யுருவின்க
ணணையுமைம் பொறியளவினும் எளிவர
அருளினை யெனப் போற்றி
யிணையில் வண்பெருங் கருணையே யேத்திமுன்
எடுத்த சொற்பதிகத்திற்
புணரு மின்னிசை பாடினராடினர்
பொழிந்தனர் விழிமாரி''

